TAMIL - 233

# கொள்கைகள் சட்டங்கள்



The Co-operative Office for Call & foreigners Guidance at Sultanah
Under the supervision of Ministry of Islamic Affairs and Endowment and Call and Guidance
Tel. 4240077 Fax 4251005 P.O. Box 92675 Riyadh 11663 E-mail: Sultanah22@hotmail.com



**عقائد وأحكام**

**أعده وترجمه للغة التاميالية**

**شعبة توعية الجاليات في الزلفي**

الطبعة الثالثة: ٩/١٤٢١ هـ.

ح المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي ، ١٤١٦هـ.

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

**شعبة توعية الجاليات بالزلفي (الزلفي)**

عقائد وأحكام - الزلفي

... ص؛ ... سم

ردمك: ٤-١٣-٨١٣-٩٩٦٠

(النص باللغة التاميلية)

١- العقيدة الإسلامية ٢- التوحيد

أ- العنوان

ديوي ٢٤٠ ١٦/٣١٩٥

رقم الإيداع: ١٦/٣١٩٥

ردمك: ٤-١٣-٨١٣-٩٩٦٠

صف وإخراج: **شعبة توعية الجاليات في الزلفي**

# உள்ளே

# أنواع التوحيد

# தவ்ஹீதின் வகைகள்

கேள்வி: **தவ்ஹீத்- ஏகத்துவத்தின் வகைகள் எத்தனை? அவற்றை விளக்கிக் கூறுக!**

பதில்: **தவ்ஹீத் மூன்று வகைப்படும். அவையாவன: 1.தவ்ஹீதுர் ருபூபிய்யா 2.தவ்ஹீதுல் உலூஹிய்யா 3.தவ்ஹீதுல் அஸ்மா வஸ்ஸிஃபாத்.**

## தவ்ஹீதுர் ருபூபிய்யா

**படைத்தல், உணவளித்தல், ஆக்கல், அழித்தல், வானம் பூமியிலுள்ள நிர்வாகம் இவை அனைத்திலும் அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவதாகும். மேலும் தூதர்களை அனுப்பிவைத்தல், வேதங்களை இறக்கி வைத்தல், மார்க்கமாக்கல் இவற்றிலும் அல்லாஹ்வையே ஒருமைப்படுத் துவதாகும்.**

**அல்லாஹ் கூறுகிறான்: அறிந்து கொள்ளுங்கள்! படைப்பும் ஆட்சியும் அவனுக்கே உரியது. அகிலங்களுக்கெல்லாம் இறைவனாகிய அல்லாஹ் மிக்க பாக்கியமுடையவன். (7:54)**

## தவ்ஹீதுல் உலூஹிய்யா

**வணக்க வழிபாடுகளில் அல்லாஹ்வை மட்டுமே ஒருமைப்படுத்துவதாகும். அவனல்லாதவனை வணங்குவதும் அழைப்பதும் கூடாது. அவனிடமே உதவி தேடவேண்டும். நேர்ச்சையையும் அறுத்துப் பலியிடுதலையும் அவனுக்கே செய்ய வேண்டும். அல்லாஹ் கூறுகிறான்: (நபியே) நீர் கூறுவீராக! எனது தொழுகை, எனது குர்பானி எனது வாழ்வு, எனது மரணம்**

ஆகிய அனைத்தும் அகிலங்களின் இறைவனான அல்லாஹ் விற்கே உரியது. அவனுக்கு யாதொரு இணையும் இல்லை. இதைக் கொண்டே நான் ஏவப்பட்டுள்ளேன். (அவனுக்கு) வழிப் பட்டவர்களில் நான் முதன்மையானவன். (6:162-163)

## தவ்ஹீதுல் அஸ்மா வஸ்ஸிபாத்

அல்லாஹ் தனது வேதத்தில் தனக்கு என்னென்ன திருப் பெயர்கள், பண்புகள் இருப்பதாகக் கூறியுள்ளானோ அவற்றை யும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களில் நபி (ஸல்) அல்லாஹ்வுக்கு என்னென்ன திருப்பெயர்கள், பண்புகள் இருப்பதாகக் கூறியுள் ளார்களோ அவற்றையும் ஒப்பாக்காமல், உருவகப்படுத்தா மல், திரித்துக் கூறாமல், மாற்றாமல், மறுக்காமல் அப்படியே நம்புவதாகும். 'அவனைப்போன்று எதுவுமில்லை. அவன் யாவற் றையும் செவியேற்பவன், பார்ப்பவன். (42:11)

## الاستعانة بغير الله

## அல்லாஹ் அல்லாதவரிடம் உதவி தேடுதல்

கேள்வி: இறைநேசர்களின் அருளால் குழந்தை கிடைக்கிறது வாழ்வாதாரம் அதிகரிக்கிறது அல்லது குறைகிறதென நம்பிக் கை கொள்ளலாமா?

பதில்: அல்லாஹ் அல்லாதவரின் உதவியால் குழந்தை கிடைக்கும், வாழ்வாதாரம் அபிவிருத்தியாகுமென்று யாராவது நம்பினால் அவன் அறியாமைக் காலத்து அரபியரை விடவும் மாபெரும் இணைவைத்தலில் இருக்கிறான். ஏனெனில் அறியா மைக்காலத்து அரபியர்களிடம் வானம், பூமியிலிருந்து உணவ ளிப்பவன், இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும் உயிருள் ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்?

எனக் கேட்டால் அல்லாஹ் என்றே கூறினர். அவர்கள் பொய்த் தெய்வங்களை வணங்கியது அவை அவர்களை அல்லாஹ் வீடம் நெருக்கி வைக்கிறது என்ற எண்ணத்தினால்தான்.

அல்லாஹ் கூறுகிறான்: உங்களுக்கு வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உணவளிப்பவன் யார்? (உங்கள்) செவிப்புலன் மீதும் பார்வைகளின் மீதும் சக்தியுடையவன் யார்? இறந்தவற் றிலிருந்து உயிருள்ளவற்றையும் உயிருள்ளவற்றிலிருந்து இறந் தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்? (அகிலங்களின் அனைத் துக்) காரியங்களையும் திட்டமிட்டுச் செயல்படுத்துபவன் யார்? என்று (நபியே!) நீர் கேளும். உடனே அவர்கள் அல்லாஹ் என் றே பதிலளிப்பார்கள். அவ்வாறாயின் அவனிடம் நீங்கள் பயபக் தியுடன் இருக்க வேண்டாமா? என்று நீர் கேட்பீராக! (10:31)

அவனை (அல்லாஹ்வை) அன்றி வேறு பாதுகாவலர்களை எடுத்துக் கொண்டவர்கள் 'அவர்கள் எங்களை அல்லாஹ் வின் பால் நெருக்கிவைப்பார்கள் என்பதற்காகவே அவர்களை நாங்கள் வணங்குகிறோம்' (எனக் கூறுகின்றனர்) அவர்கள் எதில் கருத்துவேறுபாடு கொண்டிருக்கின்றார்களோ அது பற்றி நிச்சயமாக அல்லாஹ் அவர்களுக்கிடையே தீர்ப்புச் செய் வான். பொய்யனாகவும் நிராகரித்துக் கொண்டும் இருப்பவ னுக்கு நிச்சயமாக அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை. (39:3)

தான் உணவளிப்பதை அவன் (அல்லாஹ்) நிறுத்திக் கொண் டால் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? அப்படியல்ல, இவர் கள் மாறு செய்வதிலும் (சத்தியத்தை) வெறுப்பதிலும் ஆழ்ந்தி ருக்கின்றனர். (67:21)

மேலும் கொடுப்பதும், தடுப்பதும் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியதென ஹதீஸில் வந்துள்ளது. தொழுகைக்குப் பின்னர் திக்ர் செய்தல் என்ற பாடத்தில் இமாம் புகாரீ (ரஹ்) அவர்கள் கீழ்காணும் ஆதாரப்பூர்வமான ஒரு ஹதீஸைப் பதிவு செய்து

உள்ளார்கள்: நிச்சயமாக நபி(ஸல்)அவர்கள் கடமையான ஒவ்வொரு தொழுகைக் குப் பின்னும்

لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

اَللَّهُمَّ لاَ مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلاَ مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلاَ يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ

லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்க லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலாகுல்லி ஷை இன் கதீர் அல்லாஹும்ம லாமானிஅ லிமா அஃதைத்த வலா முஃதிய லிமா மனஃத்த வலாயன்ஃபஃஉ தல்ஜத்தி மின்கல் ஜத்து எனக் கூறுவார்கள்.

(பொருள்: வணக்கத்திற்குறிய இறைவன் அல்லாஹுவைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்குரியதே. அனைத்துப் புகழும் அவனுக்கே. அவன் அனைத்தின் மீதும் பேராற்றல் உடையவன். இறைவா! நீ கொடுத்ததை தடுப்பவர் எவருமில்லை. நீ தடுத்ததைக் கொடுப்பவரும் எவரும் இல்லை. செல்வம் உடையவர் எவரையும் அவரது செல்வம் உனது தண்டனையிலிருந்து காத்திட முடியாது.)

இன்னும் சிலவேளை, அல்லாஹ், தன்னிடமே துஆ செய்து, பாதுகாப்பும் தேடிக்கொண்டிருக்கும் தன் அடியானுக்கு குழந்தைகளை வழங்கியும், வாழ்வாதாரத்தை விசாலப்படுத்தியும் கொடுக்கிறான்.

இப்றாஹீம் என்ற அத்தியாயத்தில் இப்றாஹீம் (அலை), தமது இறைவனிடம் துஆச் செய்து, அவர்கள் கேட்டதை அவன் வழங்கியதையும், மர்யம், அன்பியா அத்தியாயங்களில் ஜகரிய்யா (அலை) தம் இறைவனிடம் துஆச் செய்ததையும் அதை ஏற்றுக் கொண்டதையும் அல்லாஹ் தெளிவாகக் கூறியுள்ளான்.

யார் தன்னுடைய வாழ்வாதாரம் விசாலமாக்கப்படுவதை யும் வாழ்நாள் அதிகமாக்கப்படுவதையும் விரும்புகின்றாரோ அவர் தனது சொந்த பந்தத்தை சேர்த்து வாழட்டும் என்பது நபிமொழி- அறிவிப்பவர் அனஸ் (ரலி), (புகாரீ, முஸ்லிம்)

அல்லாஹ்வையே வணங்கி வழிபட்டு, அவனிடமே துஆச் செய்து வாழ்ந்த நல்லடியார்களுடன் அவன் நம்மைச் சேர்த்து அருள் புரிவானாக! ஆமீன்.

## عبادة القبور

## கப்ரு வணக்கம்

இறந்துவிட்ட நபிமார்கள், அவ்லியாக்கள், நல்லடியார்கள், நம் தேவைகளை நிறைவேற்றி வைப்பதாகவும் கஷ்டங்களை நீக்குவதாகவும் நம்புவது, அவர்களை அழைப்பது, உதவி தேடுவது, அபயம் கோருவது, இன்னல்கள் நீங்க இறைவனி டம் பரிந்துரை செய்யுமாறு வேண்டுவது ஆகியவை முஸ்லிம் களிடம் பரவியிருக்கின்ற பகிரங்க இணைவைப்பாகும்.

அல்லாஹ் கூறுகிறான்: அவனையன்றி (வேறு எவரையும்) நீர் வணங்கலாகாது என்றும், பெற்றோருக்கு நன்மை செய்ய வேண்டுமென்றும் உமது இறைவன் விதித்திருக்கிறான். (17:23)

துன்பத்திற்குள்ளானவன் அவனை அழைத்தால் அவனுக் குப் பதிலளித்து அவன் துன்பத்தை நீக்குபவனும் உங்களை இப்பூமியில் பிரதிநிதிகளாக ஆக்குபவனும் யார்? (இப்பணிகளை செய்ய) அல்லாஹ்வுடன் வேறு கடவுள் உண்டா? நீங்கள் மிகக் குறைவாகவே சிந்திக்கின்றீர்கள். (27:62)

மேலும் சிலர் நிற்கும்போதும் உட்காரும்போதும் படுக்கும் போதும் யா அல்லாஹ்! யாரசூல், யா முஹ்யத்தீன்! என்றும் யா அலி! யா ஸய்யதலி ஃபாத்திமா! என்றும் இதுபோன்ற பல்வேறு

அவ்லியாக்களையும் அழைக்கும் பழக்கம் உடையவர்களாக இருக்கின்றனர். இன்னும் சிலர் கப்ருகளை வலம் வருவதும், அதன் தூண்களை, படிக்கற்களை முத்தமிடவும், தடவிக் கொள்ளவும், அவற்றிற்கு சுஜூத் செய்யவும், அவற்றிற்கு முன் நின்று கொண்டு நோய் நீங்கவும், குழந்தைகள் கிடைக்கவும் பக்தியுடன் துஆவும் செய்கின்றனர். சில சமயங்களில் கப்ரிலுள் ளவர்களை நாயகமே! நான் தூரத்திலிருந்து வந்துள்ளேன் எனது தேவையை நிராசையாக்கிவிடாதீர்கள் எனவும் அழைக் கின்றனர். சிலர் கப்ருக்குச் சென்று முடி எடுக்கின்றர். நேர்ச்சை செய்கின்றனர். மேலும் அவர்களே உலகத்தை நிர்வகித்து வரு வதாகவும் நம்புகின்றனர்.

அல்லாஹ் கூறுகிறான்: நிச்சயமாக அல்லாஹ்வை அன்றி எவர்களை நீங்கள் அழைக்கின்றீர்களோ அவர்களும் உங்க ளைப்போன்ற அடிமைகளே. நீங்கள் உண்மையாளர்களாயின் அவர்களை அழைத்துப் பாருங்கள். அவர்கள் உங்களுக்குப் பதிலளிக்கட்டும். (7:194)

கியாம நாள் வரை (அழைத்தாலும்) தமக்கு பதில் கொடுக் காத- அல்லாஹ் அல்லாதவர்களை அழைப்பவர்களை விட வழி கெட்டவர்கள் யார்? தங்களை அழைப்பதையே அவர்கள் அறியமாட்டார்கள். (46:5)

அல்லாஹ் அல்லாதவர்களை அல்லாஹ்விற்கு இணையாக அழைத்த நிலையில் யாரேனும் இறந்துவிட்டால் அவன் நரகத் திற்குச் செல்வான் என்பது நபிமொழி.

அல்லாஹ்வுக்கு யாரையும், எதனையும் இணைவைக்காது அவனை வணங்கி வழிபட்டு, அவனிடமே தேவைகளனைத் தையும் கேட்டுப் பெறுகின்ற நல்லடியார்களாக அல்லாஹ் நம்மை ஆக்கியருள்வானாக!

# أين الله؟

# அல்லாஹ் எங்கே இருக்கிறான்?

அல்லாஹ் வானத்திலுள்ள அர்ஷின் மீது இருக்கிறான். இது பற்றி அல்லாஹ் கூறுகின்றான்: நிச்சயமாக உங்கள் இறைவன் அல்லாஹ்வே! அவன் வானங்களையும் பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான். பின்னர் அவன் அர்ஷில் (சிம்மாசனத்தில்) அமைந்தான். (10:3)

அர்ரஹ்மான் அர்ஷின் மீது அமைந்தான். (20:5)

வானத்திலிருப்பவன் உங்களைப் பூமியினுள் ஆழ்த்தி விடுவது குறித்து நீங்கள் அச்சமற்றிருக்கிறீர்களா? (67:16)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

என்னை நீங்கள் நம்பிக்கை கொள்ளவில்லையா? நான் வானத்திலுள்ளவனிடம் நம்பிக்கைக்குரியவனாக இருக்கிறேன் (புகாரி, முஸ்லிம்)

நீங்கள் பூமியிலுள்ளவர்களுக்குக் கருணை காட்டுங்கள். வானிலுள்ளவன் (அல்லாஹ்) உங்களுக்குக் கருணை காட்டுவான். (திர்மிதி)

நபி (ஸல்) அவர்கள் ஒரு பெண்ணிடம் அல்லாஹ் எங்கே இருக்கிறான்? எனக் கேட்டார்கள். அதற்கவள், வானத்தில் இருக்கிறான் என பதில் கூறினாள். நான் யார்? எனக் கேட்டார்கள். அதற்கவள் அல்லாஹ்வின் தூதரெனக் கூறினாள். அப்போது நபி (ஸல்) அவர்கள் அவளின் எஜமானனிடம் இவள் முஃமினாக இருக்கிறாள், இவளை உரிமை விட்டு விடுங்கள் எனக் கூறினார்கள். (முஸ்லிம்)

திருக்குர்ஆனிலும், நபிமொழியிலும் அல்லாஹ் வானிலுள்ள அர்ஷின் மீது அமைந்துள்ளானென தெளிவாக வந்துள்ளது. எனவே யாரேனும் அல் லாஹ் தூணிலும், துரும்பிலும், எல்லா இடங்களிலும் இருக்கிறான் எனக் கூறினால் அவன் குர்ஆன் வசனங்களையும் ஹதீஸ்களையும் மறுத்தவனாக காஃபிராக ஆகிவிடுகிறான். ஆகவே அல்லாஹ்வும், அவன் தூதரும் கூறியதுபோல நம்புவது கடமையாகும்.

'நீங்கள் எங்கிருந்தாலும் அல்லாஹ் உங்களுடனே இருக்கிறான்'(57:4)என்ற வசனத்தின் பொருள், நீங்கள் எங்கிருந்தாலும் அவன் உங்களைக் கண்காணித்து, உங்களின் எல்லாச் செயல்களையும் பாதுகாத்து வைத்துக்கொள்கிறான் என்பதாகும்.

அல்லாஹ் நம் அனைவரையும், அவனும் அவனது திருத் தூதரும் கூறியவற்றை அப்படியே நம்பி, அவர்களின் கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டு நடப்பவர்களாக ஆக்கியருள்வானாக!

## اتبعوا ولا تبتدعوا

## பித்அத் செய்யாதீர்கள்

மார்க்கத்தில் பித்அத் செய்வது கூடாதென நாம் எச்சரிக்கிறபோது சிலர் நீங்கள் அணிந்திருக்கும் கண்ணாடி, கைக்கடிகாரம் இன்னும் இவை போன்றதும் பித்அத்தானே எனக் கூறுகின்றனர். நபி(ஸல்)அவர்கள் இவையெல்லாம் உலகக்காரியங்கள் எனக் கூறி அவற்றைச் செய்வதற்கு அனுமதி வழங்கியுள்ளார்கள்.

உலகில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டவை இரு முனையுடைய ஆயுதங்கள் போன்றதாகும். உதாரணமாக வானொலியை எடுத்துக் கொண்டால் அதில் குர்ஆன் மற்றும் மார்க்க

சம்பந்தமான விஷயங்களைக் கேட்கிறோம். இது அனுமதிக் கப்பட்டதாகவும் விரும்பத்தக்கதாகவும் ஆகிவிடுகிறது. அதில் இன்னிசை, ஆபாசமான பாடல்களைக் கேட்டால் அது ஹறா மாகவும் ஆகிவிடுகின்றது. ஏனெனில் நிச்சயமாக அவை நற் குணங்களை நாசப்படுத்தி கூட்டு வாழ்க்கையை கெடுக்கக் கூடியதாக இருக்கின்றது.

மார்கத்தில் புதிதாக ஒன்றை ஏற்படுத்துவதற்கு குர்ஆனி லோ, ஹதீஸிலோ எவ்வித ஆதாரமுமில்லை. எனவே மார்க்க விஷயங்களில் புதிதாக ஒன்றை ஏற்படுத்துவதை இஸ்லாம் வெறுத்து, வழிகேடெனத் தீர்ப்பு வழங்கியுள்ளது. அல்லாஹ் குர்ஆனில் மார்க்கத்தில் புதிதாக ஏற்படுத்தக் கூடியவர்களை இணைக்கடவுள்கள் எனக் கூறுகிறான். 'அல்லது மார்க்கத்தில் அல்லாஹ் அனுமதிக்காததை மார்க்கமாக்கி வைக்கக் கூடிய இணைக்கடவுள்கள் அவர்களுக்கு இருக்கின்றனரா? (42:21)

நபி(ஸல்) கூறினார்கள்: நமது அனுமதி இல்லாத காரியங் களை யாரேனும் செய்தால் அது நிராகரிக்கப்படும் (முஸ்லிம்)

மார்கத்தில் புதிதானவற்றை (செய்வதை) விட்டும் உங்களை நான் எச்சரிக்கிறேன், ஏனெனில் மார்க்கத்தில் மிகக் கெட்டது புதிதானவற்றை ஏற்படுத்துவதாகும், புதியவையனைத்தும் வழி கேடாகும். (திர்மிதி) பித்அத்காரன் பித்அத்தை விடுகின்ற வரை அல்லாஹ் அவனது தவ்பாவை ஏற்கமாட்டான். (தப்ரானி)

இப்னு உமர் (ரலி) கூறினார்கள்: எல்லா பித்அத்துகளும் வழி கேடுதான் அவற்றைச் செய்பவன் அவை நன்மையெனக் கரு தினாலும் சரியே. (பித்அத் என்பது நபி (ஸல்) காலத்தில் இல்லா மலிருந்து பின்னால் உருவாக்கப்பட்டவையாகும்)

அல்லாஹ் நம் அனைவரையும் பித்அத்துகளை விடுத்து, அல்லாஹ்வும், அவனது தூதரும் ஏவியவற்றைக் கடைபிடித்து நடப்பவர்களாக ஆக்கி அருள்வானாக! ஆமீன்.

# أحكام الزكاة

# ஸகாத்தின் சட்டங்கள்

ஸகாத் இஸ்லாத்தின் கடமைகளில் மூன்றாவது கடமையாகும். ஒரு முஸ்லிமிடம் ஸகாத் கொடுக்கும் அளவிற்கு தொகையிருந்து ஒரு வருடமும் முடிந்துவிட்டால் அவனுக்கு ஸகாத் கடமையாகும். 'தொழுகையை நிலை நிறுத்துங்கள், ஸகாத் கொடுங்கள் என்று அல்லாஹ் கூறுகிறான். (2:110)

ஸகாத் கடமையாகப்பட்டிருப்பதில் சில தத்துவங்களும் பல பயன்களும் உள்ளன. அவை:

1. மனிதனைக் கஞ்சத்தனத்திலிருந்து தூரமாக்குவது, தூய்மைப்படுத்துவது.
2. முஸ்லிமுக்கு தர்ம சிந்தனையை ஏற்படுத்துவது.
3. செல்வந்தனுக்கும் ஏழைக்குமிடையே நேசத்தை நிரந்தரமாக்குவது. ஏனெனில் மனித உள்ளங்கள் உபகாரம் செய்பவர்களை நேசிப்பதன் மீதே படைக்கப்பட்டுள்ளன.
4. ஏழை முஸ்லிமின் தேவை நிறைவு செய்யப்பட்டு, அவனுக்குப் போதுமான ஒரு நிலையை உருவாக்குவது.
5. மனிதனை பாவங்களிலிருந்து சுத்தப்படுத்துவது- பாவங்களை அழித்து, பதவிகளை உயர்த்துவதற்கும் ஸகாத் காரணமாக அமைகிறது எனும் வகையில்.

## எவற்றில் ஸகாத் கடமை?

தங்கம், வெள்ளி, வியாபாரப் பொருட்கள், ஆடு, மாடு, ஒட்டகம், பூமியிலிருந்து கிடைக்கக்கூடிய தானியங்கள், பழங்கள், உலோகங்கள் ஆகியவற்றில் ஸகாத் கடமையாகும்.

## தங்கம், வெள்ளி

**தங்கம், வெள்ளி எவ்வகையைச் சார்ந்ததாக இருந்தாலும் அவற்றிற்கு ஸகாத் கடமையாகும். நிஸாப் எனும் உச்சவரம்பு அளவு தங்கம், வெள்ளியின் யாரிடம் உள்ளதோ அவர் மீது ஸகாத் கடமையாகும். தங்கத்தில் நிஸாப் அளவு 20 மிஸ்கால்- எழுபது கிராம் ஆகும். வெள்ளியின் நிஸாப் 200 திர்ஹம்- நா நூற்று அறுபது கிராம் ஆகும். யார் தங்கத்திற்குரிய நிஸாப் அளவை வைத்திருக்கின்றாரோ அவர் தன்னிடமுள்ளதில் இரண்டரை சதவீதம் ஸகாத் கொடுப்பது அவர் மீது கடமை யாகும். அது 1½ கிராமாகும். வெள்ளியின் நிஸாபை வைத்தி ருப்பவரின் மீது பதினொன்றரைக் கிராம் கடமையாகும்.**

ரொக்கப் பணமாக ஒருவர் ஸகாத் கொடுக்க விரும்பினால் எந்த நாளில் ஓராண்டு பூர்த்தியாகின்றதோ அந்த நாளில் ஒரு கிராம் தங்கம் அல்லது வெள்ளியின் விலை மதிப்பைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு அதற்கு நிகரான பணத்தை ஸகாத் கொடுக்க வேண்டும்.

உதாரணமாக ஒருவரிடம் நூறு கிராம் தங்கம் இருந்தால் அவருக்கு அதில் ஸகாத் கடமை யாகிவிடுகின்றது. ஏனெனில் அவர் நிஸாப் எனும் உச்சவரம்பைப் பெற்று விட்டார். அதற் குரிய ஸகாத் இரண்டரை கிராமாகும்.

இந்த ஸகாத்தை அவர் ரொக்கப் பணமாகக் கொடுக்க நாடினால் ஸகாத் கடமையான நாளின் தங்கத்தின் விலை மதிப்பைக் கேட்டு, இரண்டரை கிராம் தங்கத்தின் மதிப்பிற் குச் சமமான தொகையை ஸகாத் கொடுக்க வேண்டும்.

இதுபோல ரொக்கப் பணம் ஸகாத்தின் நிஸாபை அடைந்து ஓராண்டு பூர்த்தியாகி விட்டால் அதில் ஸகாத் கடமையாகி விடு கிறது. எனவே ஒருவனிடம் எழுபது கிராம் தங்கம் அளவிற்கு ரொக்கப் பணம் இருந்தால் அவனுக்கு ஸகாத் கடமையாகி

விடுகிறது. இரண்டரை சதவீத அளவீற்குக் கணக்கிட்டு அவன் ஸகாத் கொடுத்துக் கொள்ள வேண்டும்.

எனவே ஒரு முஸ்லிமிடம் பணமிருந்து ஓராண்டு பூர்த்தியாகி விட்டால் அவன் தங்க வியாபாரியிடம் எழுபது கிராம் தங்கத் தின் விலை மதிப்பைக் கேட்க வேண்டும். அத்தொகை போன்று அவனிடமிருக்குமானால் அதற்கு அவன் ஸகாத் கொடுக்க வேண்டும். வியாபாரி கூறியதை விட அவனிடம் குறைவாக இருக்குமானால் அவனுக்கு ஸகாத் கடமையாகாது.

உதாரணமாக, ஒருவனிடம் முப்பதாயிரம் ரூபாய் இருந்து, ஓராண்டும் நிறைவு பெற்றிருந்தால் அவன் தனது நாட்டின் நாணய மதிப்பீடு தங்கத்தின் அளவைக் கொண்டிருக்குமா னால், தங்கத்தின் ஒரு கிராம் விலையைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். அல்லது தன் நாட்டின் நாணய மதிப்பீடு வெள்ளியைக் கொண்டிருக்குமானால் ஒரு கிராம் வெள்ளியின் விலையைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். அப்போது 70 கிராம் தங்கத்தின் விலை நாற்பதாயிரமாக இருக்குமானால் அவனுக்கு ஸகாத் கடமையாகாது. ஏனெனில் அவனிடமுள்ள இந்தத் தொகை ஸகாத் கொடுக்குமளவுள்ள தொகையல்ல. வெள்ளிக்கும் இவ்வாறே செய்து கொள்ள வேண்டும்.

## பங்குகளுக்கு ஸகாத்

இக்காலத்தில் மக்கள் அசையாச் சொத்திலும், மற்றவற்றி லும் பங்குகள் போடும் பழக்கம் உடையவர்களாக இருக்கின் றனர். இன்னும் இவர்களில் சிலர் அப்பங்குகளில் ஒரு தொகை யை சில சமயங்களில் பல ஆண்டுகளாக முடக்கி வைப்பவர் களும் இருக்கின்றனர். அத்தொகை கூடவும் செய்யும் குறைய வும் செய்யும். இவை வியாபாரப் பொருட்களாகக் கணிக்கப்படு வதால் இப்பங்குகளுக்கும் ஸகாத் இருக்கிறது.

எனவே ஒரு முஸ்லிம் ஒவ்வொரு ஆண்டும் அவற்றின் மதிப்பைக் கணக்கிட்டு அவற்றிற்குரிய ஸகாத்தைக் கொடுக்க வேண்டும் அல்லது அவற்றை விற்று, அவற்றின் கிரயத்தைப் பெற்றுக் கொள்ளும்போது அந்த வருடங்கள் அனைத்திற்கும் ஸகாத் கொடுக்க வேண்டும்.

## வியாபாரப் பொருளுக்குரிய ஸகாத்

பொருள் வசதியைப் பெற்று அதை வியாபாரத்தில் முதலீடு செய்யக்கூடிய முஸ்லிமான வியாபாரியின் மீது ஸகாத் கொடுப்பதை வருடம் ஒரு முறை இஸ்லாம் கடமையாக்கியுள்ளது. இது, அல்லாஹ்வின் அருளுக்கு நன்றி செய்வதற்காகவும் தன் சகோதரர்களில் தேவையுடையவர்களின் தேவையை நிறைவு செய்வதற்காகவும் ஆகும்.

இலாபத்தை நோக்கமாகக் கொண்டு அசையாப் பொருள்கள், பிராணி, உணவு, பானம், கார் போன்றவற்றில் இலாபத்தை நோக்கமாகக் கொண்டு கொடுக்கல் வாங்கல் செய்யக் கூடிய அனைத்திலும் ஸகாத் கடமையாகின்றது. இவற்றில் ஸகாத்திற்குரிய நிபந்தனை: பணம் நிஸாப் என்னும் உச்சவரம்பை எட்டியிருக்க வேண்டும். அவற்றை வெள்ளி, தங்கம் இவ்விரண்டில் ஒன்றின் கிரயத்திற்கு ஈடாக மதிப்பிட வேண்டும். அவற்றின் மொத்த கிரயத்தில் இரண்டரை சதவீதம் ஸகாத் கடமையாகும்.

ஒருவனின் வியாபாரப் பொருளின் கிரயமாக ஒரு லட்சம் ரூபாய் இருக்குமானால் அவன் அதில் 2,500 ரூபாய் ஸகாத் கொடுப்பது கடமையாகும். வியாபாரிகள் ஒவ்வொரு வருடமும் தங்களது இருப்பை விலை மதிப்பீடு செய்வது கடமை. பிறகு அவற்றின் ஸகாத்தைக் கொடுப்பார்கள். ஒரு வியாபாரி ஒரு வருடம் பூர்த்தியாகுவதற்கு பத்து நாட்களிருக்கும்போது ஒரு பொருளை விலைக்கு வாங்கினால் அதை மற்றைய பொருள்

களுடன் சேர்த்து அதற்கு ஸகாத் கொடுத்து விட வேண்டும். வியாபாரத்தை எந்த நாள் ஆரம்பித்தானோ அந்நாளிலிருந்து வருடம் ஆரம்பமாகிவிடுகிறது. எல்லா முஸ்லிம்களும் தங்களிடமுள்ளவற்றிற்கு ஒவ்வொரு வருடமும் ஸகாத் கொடுக்க வேண்டியதிருப்பதால் இது வருடாந்திர ஸகாத் என்றாகிவிட்டது.

தீனி கொடுத்து வளர்க்கும் கால்நடைகள் வியாபாரத்திற்குரியவையாக இருக்குமானால் அவை ஸகாத் தொகையை அடைந்தாலும் அடையா விட்டாலும் அவற்றின் விலை மதிப்பீடு நிஸாபுக்கு மேல் போகும்போது அவற்றின் பேரில் ஸகாத் கடமையாகிவிடும். எனவே அவன் அவற்றிற்கு பணத்தைக் கணக்கிட்டு ஸகாத் கொடுக்க வேண்டும்.

## விளைபொருளுக்குரிய ஸகாத்

சேமிக்கப்படக் கூடிய, நிறுக்கப்படக்கூடிய பேரீத்தம் பழம் திராட்சைப்பழம் போன்ற கனிவகைகளிலும் மணிக்கோதுமை, தொலிக்கோதுமை, அரிசி போன்ற தானியங்களிலும் ஸகாத் கடமையாகும். எனினும் சேகரிக்கப்பட முடியாத பழங்களிலும், காய்கறிகளிலும் ஸகாத் கடமையில்லை. விளைபொருள்கள் நிஸாப் எனும் உச்சவரம்பை அடைந்து விட்டால் ஸகாத் கட்டாயமாகும். அவற்றின் நிஸாப் 675 கிலோவாகும். கோதுமைக்குரிய நிஸாப் 552 கிலோவாகும். ஓராண்டு பூர்த்தியாக வேண்டும் என்பது இவற்றில் நிபந்தனையில்லை.

இவை மழை நீர், ஆற்று நீர் போன்ற தண்ணீரால் செலவின்றி நீர்ப்பாசனம் செய்யப்பட்டு விளைந்திருக்குமாயின் 10-ல் ஒன்று ஸகாத் கடமையாகும். தண்ணீருக்காக செலவு செய்யப்பட்டிருக்குமானால் இருபதில் ஒன்று கடமையாகும். உதாரணமாக ஒருவன் கோதுமையை செலவின்றி நீர்ப்பாசனம் செய்து அதில் அவனுக்கு 800 கிலோ கிடைத்திருக்குமானால் அதில் பத்தில் ஒன்று- 80 கிலோ- ஸகாத் கடமையாகும். செலவுடன்

பாசனம் செய்திருந்தால் இருபதில் ஒன்று அதாவது 40 கிலோ ஸகாத் கடமையாகும்.

## கால்நடைகளுக்குரிய ஸகாத்

கால்நடைகள் என்றால் ஒட்டகம், மாடு, வெள்ளாடு, செம்மறி ஆடு, ஆகியவையாகும். இவற்றில் கீழ் காணும் நிபந்தனைகளுடன் ஸகாத் கடமையாகும்.

1. நிஸாப் எனும் உச்சவரம்பை எட்ட வேண்டும். ஒட்டகத்தின் நிஸாப் ஐந்து. செம்மறி ஆடு, வெள்ளாடு இவற்றின் நிஸாப் நாற்பது. மாட்டின் நிஸாப் முப்பது. இதற்கு குறைவானதில் ஸகாத் கிடையாது.
2. இவை உரிமையாளரிடம் ஓராண்டு முழுமையாக இருக்க வேண்டும்.
3. இக்கால்நடைகள் வருடத்தில் அதிக நாட்கள் வெளியே சென்று மேய்ந்ததாக இருக்க வேண்டும். தீனி கொடுத்து வளர்க்கப்பட்டவையாகவோ அல்லது அவற்றுக்கான தீனி விலைக்கு வாங்கப்பட்டவையாகவோ இருந்தால் அல்லது அவற்றுக்கான தீனியை உரிமையாளரே சேகரிக்கிறாரெனில் இதுபோன்ற கால்நடைகளுக்கு ஸகாத் கடமையில்லை. ஆனால் இவை வருடத்தில் அதிக நாட்கள் மேய்ந்தவையாக இருந்தால் ஸகாத் கடமையாகும்.
4. அவை பணியில் ஈடுபடுத்தப்படாதவையாக இருக்க வேண்டும். அவற்றின் உரிமையாளன் அவற்றை விவசாயத்திலோ அல்லது சுமை தூக்கவோ அல்லது வேறு வேலைகளுக்கோ அவற்றைப் பயன்படுத்தாமல் இருக்கவேண்டும்.

## ஒட்டகம்

ஒரு முஸ்லிமிடம் ஒட்கத்திற்குரிய நிஸாப் அதாவது ஐந்து ஒட்டகங்கள் இருந்தால் அவற்றுக்கு ஸகாத் கடமையாகும்.

அவனிடம் ஐந்துக்கு மேல் ஒன்பது வரை ஒட்டகங்கள் இருந்து, ஓராண்டு பூர்த்தியாகி இந்திருந்தால் அவற்றில் ஒரு ஆடு ஸகாத் கடமையாகும். பத்துக்கு மேல் பதினான்கு வரை இருந்தால் அவற்றில் இரண்டாடு கடமையாகும். பதினைந் திற்கு மேல் பத்தொன்பது வரை மூன்றாடுகள். இருபதிற்கு மேல் இருபத்து நான்கு வரை நான்கு ஆடுகள். இருபத்தைந் திற்கு மேல் முப்பத்தைந்து வரை ஒரு வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். இது அவனுக்கு கிடைக்க வில் லையெனில் இரு வயது பூர்த்தியான ஒரு ஆண் ஒட்டகம்.

36 க்கு மேல் 45 வரை 2 வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். 46 க்கு மேல் 60 வரை மூன்று வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். 61 க்கு மேல் 75 வரை நான்கு வயது பூர்த்தி யான ஒரு பெண் ஒட்டகம். 76 க்கு மேல் 90 வரை இரு வயது பூர்த்தியான இரு பெண் ஒட்டகம். 91 க்கு மேல் 120 வரை 3 வயது பூர்த்தியான இரு ஆண் ஒட்டகங்கள். இதற்கு மேல் அதிகமானால் ஒவ்வொரு நாற்பதுக்கும் இரு வயது பூர்த்தி யான ஒரு பெண் ஒட்டகம். ஒவ்வொரு ஐம்பதுக்கும் மூன்று வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம். கீழ் காணும் அட்ட வணை ஒட்டகத்திற்குரிய ஸகாத்தை தெளிவுபடுத்துகிறது.

| எண்ணிக்கை | ஸகாத் |
|---|---|
| 5 முதல் 9 வரை | ஒரு ஆடு |
| 10 முதல் 14 வரை | இரு ஆடு |
| 15 முதல் 19 வரை | மூன்று ஆடு |
| 20 முதல் 24 வரை | நான்கு ஆடு |
| 25 முதல் 35 வரை | ஒரு வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் அல்லது இரு வயது பூர்த் தியான ஒரு ஆண் ஒட்டகம் |
| 36 முதல் 45 வரை | இரு வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் |

| | |
|---|---|
| 46 முதல் 60 வரை | மூன்று வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் |
| 61 முதல் 75 வரை | நான்கு வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகம் |
| 76 முதல் 90 வரை | இரு வயது பூர்த்தியான இரு பெண் ஒட்டகங்கள் |
| 91 முதல் 120 வரை | மூன்று வயது பூர்த்தியான இரு ஒட்ட கங்கள் |

இதற்கு மேல் அதிகமாக இருந்தால் ஒவ்வொரு நாற்பதுக் கும் இரு வயது பூர்த்தியான ஒரு பெண் ஒட்டகமும் ஒவ்வொரு ஐம்பதுக்கும் 3 வயது பூர்த்தியான ஒரு ஒட்டகமும் கொடுக்க வேண்டும்.

## மாடுகள்

ஒருவனிடம் 30-க்கு மேல் 39 வரை மாடுகள் இருந்தால் ஒரு வயது பூர்த்தியான ஒரு பசுவும், 40 க்கு மேல் 59 வரை இரு வயது பூர்த்தியான ஒரு பசுவும், 60 க்கு மேல் 69 வரை ஒரு வயது பூர்த்தியான இரண்டு காளைகளும், 70 க்கு மேல் 79 வரை இரு வயது பூர்த்தியான ஒரு பசுவும் ஒரு வயது பூர்த்தியான ஒரு காளையும் பின்னர் ஒவ்வொரு 30 க்கும் ஒரு வயது பூர்த்தியான ஒரு காளையும், ஒவ்வொரு 40 க்கும் ஒரு வயது பூர்த்தியான பசுவும் கொடுக்க வேண்டும்.

| எண்ணிக்கை | ஸகாத் |
|---|---|
| 30 முதல் 39 வரை | ஒரு வயது பூர்த்தியான ஒரு பசு |
| 40 முதல் 59 வரை | இரு வயது பூர்த்தியான ஒரு பசு |
| 60 முதல் 69 வரை | ஒரு வயது பூர்த்தியான 2 காளை |
| 70 முதல் 79 வரை | 2 வயது பூர்த்தியான ஒரு பசு, ஒரு வயது பூர்த்தியான ஒரு காளை |

## ஆடுகள்

ஒருவனிடம் 40 முதல் 120 வரை ஆடுகள் இருந்தால் அவன் ஒரு ஆடு கொடுப்பது கடமையாகும். 121 முதல் 200 வரை இரு ஆடுளும், 201 முதல் 300 வரை மூன்று ஆடுக ளும், 301 முதல் 400 வரை நான்கு ஆடுகளும், 401 முதல் 500 வரை ஐந்து ஆடு களும் கொடுக்க வேண்டும். பின்னர் இதற்கு மேல் அதிகமாகும் பட்சத்தில் ஒவ்வொரு நூறு ஆடுகளுக்கும் சராசரி ஒரு ஆடு கொடுக்க வேண்டும்.

| எண்ணிக்கை | ஸகாத் |
|---|---|
| 40 முதல் 120 வரை | ஒரு ஆடு |
| 121 முதல் 200 வரை | இரு ஆடுகள் |
| 201 முதல் 300 வரை | மூன்று ஆடுகள் |
| 301 முதல் 400 வரை | நான்கு ஆடுகள் |
| 401 முதல் 500 வரை | ஐந்து ஆடுகள் |

பின்பு ஒவ்வொரு நூறு ஆடுகளுக்கும் ஒரு ஆடு கொடுக்க வேண்டும்.

## ஸகாத் பெறத் தகுதியானவர்கள்

அல்லாஹ் கூறுகிறான்: (ஸகாத் என்னும்) தானதர்மங்க ளெல்லாம் ஏழைகளுக்கும், வறியவர்களுக்கும் இந்த தானதர் மங்களை வசூல் செய்யும் ஊழியர்களுக்கும், இஸ்லாத்தின் பால் உள்ளம் ஈர்க்கப்பட்டவர்களுக்கும், அடிமைகளை விடுத லை செய்வதற்கும், கடன்பட்டவர்களுக்கும், அல்லாஹ்வின் பாதையில் (போர் புரிவோருக்கும்) வழிப்போக்கர்களுக்கும் உரிய னவாகும். (இது) அல்லாஹ் விதித்த கடமையாகும். அல்லாஹ் (யாவும்) அறிபவன், மிக்க ஞானமுடையோன். (9:60)

அல்லாஹ் ஸகாத் பெறத் தகுதியான எட்டு வகைக் கூட்டத்தினரை விளக்கிக் கூறியுள்ளான். இஸ்லாமிய மார்க்கத்தில் ஸகாத் சமுதாயத்தையும் தேவையுடையோரையும் சென்றடைகின்றது. ஏனைய மார்க்கங்களிலுள்ளது போல-மார்க்க வீற்பன்னர்களுக்கு மட்டுமே கொடுக்கப்பட மாட்டாது.

1. ஃபகீர் (ஏழை): உயிர் வாழ்வதற்குப் போதுமான தேவைகளில் பாதிக்கும் குறைவாக பெற்றிருப்பவர்.
2. மிஸ்கீன்: உயிர் வாழ்வதற்குப் போதுமான தேவைகளில் பாதிக்கு மேல் பெற்றிருப்பவர். எனினும் அவர் போதுமான முழுமையான அளவைப் பெற்றுக் கொள்வதில்லை. இவர்களுக்கு பல மாதங்களுக்கான அல்லது ஒரு வருடத்திற்குப் போதுமான அளவிற்குரிய பணம் ஸகாத் நிதியிலிருந்து கொடுக்க வேண்டும்.
3. ஸகாத் தொகையை வசூலிப்பவர்கள்: ஸகாத் தொகையை செல்வந்தர்களிடமிருந்து சேகரிப்பதற்காக ஆட்சியாளரால் நியமிக்கப்படுபவர்கள். அவர்கள் செல்வந்தர்களாயிருந்தாலும் அவர்களது அந்தஸ்த்திற்கேற்ப அவர்களது வேலைக்குரிய கூலியைக் கொடுக்க வேண்டும்.
4. உள்ளம் ஈர்க்கப்பட்டவர்கள்: தம் மக்களிடம் மரியாதைக்குரிய தலைவர்களில் இஸ்லாத்திற்கு வருவார்கள் அல்லது முஸ்லிம்களுக்குக் தொல்லை தராமலிருப்பார்கள் என்று எவர்கள் குறித்து எதிர்பார்க்கப்படுகிறதோ அத்தகையவர்கள். இவ்வாறே இஸ்லாத்தில் புதிதாக வந்தவர்களுக்கும் அவர்களது உள்ளங்கள் இஸ்லாத்தின் பால் நேசமாக்கப்படுவதற்காகவும், அவர்களது ஈமான் உறுதியாகுவதற்காகவும் அவர்களுக்கு ஸகாத் கொடுக்க வேண்டும்.
5. அடிமைகளை உரிமைவிடுவதற்காகவும் எதிரிகளால் கைது செய்யப்பட்டோரை விடுவிப்பதற்காகவும் ஸகாத் கொடுக்கப்பட வேண்டும்.

6. கடன்பட்டவர்கள்: இவர்களின் கடனை அடைப்பதற்காக ஸகாத் நிதியிலிருந்து கொடுக்கப்பட வேண்டும். ஆயினும் இவர்கள் முஸ்லிம்களாகயிருப்பதும், கடனை அடைப்தற்கு வசதியுள்ள செல்வந்தர்களாக இல்லாமலிருப்பதும், அவர்களது கடன் பாவத்திற்குரியதாக இல்லாமலிருப்பதும் தற்காலிக கடனாக இருப்பதும் ஷர்த்தாகும்.

7. அல்லாஹ்வின் பாதையில்: ஊதியத்தை எதிர்பார்க்காமல் வணக்கமாகக் கருதி போர்புரிபவர்கள். அவர்களின் செலவிற்காக அல்லது ஆயுதங்கள் வாங்குவதற்காக ஸகாத் கொடுக்க வேண்டும். மார்க்கக் கல்வியைத் தேடுவதும் ஜிஹாதைச் சேர்ந்ததே. மார்க்கக் கல்வியில் ஈடுபடுவதை நாடும் ஒரு மனிதன் தன்னிடம் பொருளாதார வசதியில்லாமலிருக்குமானால் அவன் மாாக்கக் கல்வியைத் தேடுவதில் ஈடுபடுமளவிற்கு போதுமான தொகையை மட்டும் ஸகாத் நிதியிலிருந்து கொடுப்பது கூடும்.

8. வழிப்போக்கன்: ஊருக்குச் செல்ல முடியாமல் வழியிலேயே நின்றுவிட்ட ஒரு பயணி. அவனது ஊரில் அவன் செல்வந்தனாக இருந்தாலும் அவன் ஊர் போய்ச் சேருமளவிற்கு ஸகாத் தொகையிலிருந்து கொடுக்க வேண்டும்.

ஸகாதின் நிதி பள்ளிகட்டுவதற்கும் சாலைகளை சீர் படுத்துவதற்கும் செலவிடுவது கூடாது.

## குறிப்பு

1. முத்து, பவளம், மீன் இன்னும் இவை போன்ற கடலிலிருந்து எடுக்கப்படுபவற்றில் வியாபாரத்திற்கென ஒதுக்கப்பட்டவற்றைத் தவிர மற்றவற்றில் ஸகாத் கடமையில்லை.
2. வாடகைக்கான கட்டடங்கள், தொழிற்சாலைகள் போன்றவற்றில் ஸகாத் கடமையில்லை. எனினும் வாடகைப் பணம்

நிஸாப் எனும் உச்சவரம்பை எட்டியிருந்து ஓராண்டு பூர்த்தியாகிவிடுமானால் அதில் ஸகாத் கடமையாகும். உதாரணமாக ஒருவன் ஒரு வீட்டை வாடைக்கு விட்டு அதன் வாடகயை எடுத்துக் கொள்கிறான். அவன் வாடகையாக எடுத்துக் கொண்ட தொகைக்கோ அல்லது அதில் சிறிதளவுக்கோ- அவை ஸகாத்தின் அளவை அடைந்து ஓராண்டு பூர்த்தியாகிவிடுமாயின் அதில் ஸகாத் கடமையாகும்.

## أحكام الأطعمة

## உணவுகளின் சட்டங்கள்

அல்லாஹ் தன்னுடைய அடியார்களைத் தூய்மையானவற்றை உண்ணுமாறு ஏவியுள்ளான். அசுத்தமானவற்றை உண்ண வேண்டாமெனத் தடுத்துள்ளான். "ஈமான் கொண்டவர்களே! நாம் உங்களுக்கு அளித்துள்ளவற்றில் தூய்மையானதையே உண்ணுங்கள்" (2:172)

உணவுப் பொருட்களைப் பொறுத்தவரை சட்டத்தின் அசல் நிலை ஆகுமென்பதே! எவற்றை உண்ணக் கூடாதென தடுக்கப்பட்டுள்ளதோ அவற்றைத் தவிர! எனவே அல்லாஹ் தனது அடியார்களுக்கு தூய்மையானவற்றை அனுமதித்திருக்கிறான் என்று சொன்னால் அதன் மூலம் அவர்கள் பயன் பெற வேண்டும் என்பதற்காகத்தான். பாவங்களுக்கு அல்லாஹ்வின் அருட்கொடைகளைப் பயன்படுத்தக் கூடாது.

அல்லாஹ் என்னென்ன உணவு, பானங்களை- ஹராம்- விலக்கப்பட்டதாக்கியுள்ளானோ அவற்றைத் தனது அடியார்களுக்குத் தெளிவுபடுத்தியுள்ளான்.

அல்லாஹ் கூறுகிறான்: நிர்பந்தமான சூழ்நிலைகளைத் தவிர மற்ற சமயங்களில் அல்லாஹ் உங்களுக்குத் தடை

செய்துள்ளவை பற்றி திண்ணமாக அவன் உங்களுக்கு விளக்கியுள்ளான். (6:119) எனவே அல்லாஹ் ஹராமென தெளிவாகக் கூறாதவை ஹலாலாகும்.

நபி(ஸல்)கூறினார்கள்: அல்லாஹ் நிச்சயமாக சில கடமைகளைக் கடமையாக்கியுள்ளான், அவற்றைப் பாழாக்கி விடாதீர்கள். சில வரம்புகளை விதித்துள்ளான், அவற்றை மீறிவிடாதீர்கள். சில பொருட்களைத் தடை செய்துள்ளான், அவற்றை ஆகுமாக்கி இறைச் சட்டத்தை பங்கப்படுத்திவிடாதீர்கள், சில விஷயங்கள் பற்றி மறதியின்றி உங்களின் மீது கிருபை கொண்டு எதுவும் கூறாமல் மௌனம் சாதித்துள்ளான் அவை பற்றி நுணகிப் பார்த்துக் கொண்டிருக்காதீர்கள்.

உணவுகள், பானங்கள், உடைகள் இவற்றில் அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஹராம் என்று தெளிவாகக் கூறாதவற்றை நாம் ஹராமாக்கக் கூடாது.

அடிப்படை என்னவென்றால் தூய்மையான கெடுதியிழைக்காத அனைத்து உணவுகளும் ஹலாலானவையே. செத்தவைகள், இரத்தம், மதுபானம், புகையிலை, அசுத்தமானவை போன்ற அசுத்தமான உணவுகள் நீங்கலாக! ஏனென்றால் இவை ஹராமாகும். காரணம் இவை அசுத்தமானவையாகவும் கெடுதியிழைக்கக் கூடியவையாகவும் உள்ளன. செத்தவை என்றால் மார்க்கம் அனுமதித்த முறையில் அறுக்கப்படாமல் உயிர் பிரிந்தவை ஆகும். இரத்தம் என்பது அறுக்கப்பட்ட பிராணியிலிருந்து வெளியேறியதாகும். அறுக்கப்பட்ட பின் மாமிசத்திலும் நரம்புகளிலும் தங்கியிருக்கும் இரத்தம் ஹலாலாகும்.

அனுமதிக்கப்பட்ட உணவுகளில் பிராணிகள், தாவரங்கள் என இரு வகை உள்ளன. அவற்றில் கெடுதியில்லாதவை ஹலாலாகும். பிராணிகளில் கடலில் வாழக்கூடியவை, தரையில் வாழக்கூடியவை என இரு வகை உள்ளன. கடலில் வாழக்

கூடியவை அனைத்தும் பொதுவாக ஹலாலாகும். அவற்றை அறுக்க வேண்டும் என்ற நிபந்தனை கிடையாது. காரணம் கடல்வாழ்ப் பிராணிகளில் செத்தவைகளே ஆகுமானவையாக உள்ளன!

தரையில் வாழக்கூடிய பிராணிகளில் இஸ்லாம் ஹராமாக் கியவற்றைத் தவிர ஏனைய அனைத்தும் ஹலாலாகும். அவை: 1. நாட்டுக் கழுதை 2. கழுதைப் புலி நீங்கலாக கீறிக்கிழிக்கக் கூடிய பற்கள் உள்ளவை. 3. பறவைகளில் வேட்டையாடக் கூடிய நகங்கள் உள்ளவை நீங்கலாக அனைத்தும் அனும திக்கப்பட்டவையாகும்.

மிருகங்களில் கீறிக்கிழிக்கக்கூடிய பற்கள் உள்ளவற்றை யும் பறவைகளில் வேட்டையாடக்கூடிய நகங்கள் உள்ளவற் றையும் நபி(ஸல்) தடுத்துள்ளார்கள் என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கிறார்கள். (முஸ்லிம்)

பறைவைகளில் பிணம் தின்னக் கூடியவை ஹராமாகும். கழுகு, பருந்து, காகம் போன்று. ஏனெனில் இவை அசுத்தாமா னவற்றைத் தின்கின்றன. பாம்பு, எலி, புழு, பூச்சிகள் போன்ற அறுவருக்கத்தக்கவையும் ஹராமாகும்.

மேற்கூறப்பட்ட பிராணிகள், பறவைகள் தவிர அனைத்தும் ஹலாலாகும். உதாரணமாக குதிரை, ஆடு, மாடு, ஒட்டகம், கோழி, காட்டுக் கழுதை, மான், ஒட்டகச்சிவிங்கி, தீக்கோழி, முயல் இன்னும் இவை போன்றவை. இவற்றில் நஜீஸை-அசுத்தத்தை அதிகமாக உண்ணக்கூடியவை நீக்கப்பட்டுள் ளன. அவற்றை மூன்று நாட்கள் அடைத்து வைத்து சுத்த மானவற்றை உணவாகக் கொடுக்கப்படும் வரை உண்பது ஹராமாகும். வெறுக்கத்தக்க வாடையுள்ள பூண்டு, வெயங் காயம் போன்றவற்றை உண்பது வெறுக்கத்தக்கதாகும். குறிப் பாக பள்ளிவாசலுக்கு வரும்போது.

விலக்கப்பட்ட (ஹராமான) உணவை உண்ண வேண்டிய நிர்பந்தம் ஒருவனுக்கு ஏற்பட்டால்- அதை உண்ணவில்லையானால் அழிந்துபோவான் என அஞ்சுவது போன்ற நிலைமை எனில், தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் அளவு அதை உண்பது அவனுக்குக் கூடும். ஆனால் நஞ்சைத் தவிர!

ஒருவன் ஒரு தோட்டத்தைக் கடந்து செல்கிறான், அதன் கனிகள் மரத்தில் இருக்கின்றன அல்லது கீழே விழுந்து கிடக்கின்றன என்றால் அத்தோட்டத்திற்கு மதில் சுவரும், காவலாளியும் இல்லை என்றால் அதிலிருந்து சாப்பிட்டுக் கொள்ளலாம் எடுத்துச் செல்லக் கூடாது. ஆனால் மரத்தில் ஏறியோ அல்லது எதையாவது கொண்டு எறிந்தோ அல்லது சேகரித்து வைக்கப்பட்டதிலிருந்தோ நிர்ப்பந்தமின்றி உண்பது கூடாது. நிர்பந்த சூழ்நிலைக்கு விதிவிலக்கு உண்டு!

## அறுப்பதன் சட்டங்கள்

தரைவாழ்ப் பிராணிகள் ஹலால் ஆக வேண்டுமானால் அவற்றை அறுப்பது நிபந்தனை என்று ஷரீஅத் சொல்வதால் அறுப்பது பற்றிய சட்ட நிலைகளை அறிவது அவசிய மாகிறது.

அறுக்கும்போது தரைவாழ்ப் பிராணியின் தொண்டையையும், உணவுக் குழாயையும் முறிக்கும் அளவு அறுக்க வேண்டும். அறுக்க இடமளிக்காத பிராணியைக் குத்தி வீழ்த்தி அறுக்க வேண்டும். சக்திக்குட்பட்ட எந்தப் பிராணியையும் அறுக்காமல் உண்பது ஹலாலாகாது. ஏனெனில் அறுக்கப்படாதவை செத்தவையாகும்.

## அறுப்பதற்குரிய விதிகள்

அறுப்பதற்கு சில விதிகள் உள்ளன. அவை வருமாறு:

1. அறுக்கத் தகுதியானவனாக இருக்க வேண்டும். அதாவது அறுப்பவன் புத்தி சீர் நிலையில் உள்ள, மார்க்கமறிந்த

முஸ்லிமாகவோ அல்லது வேதம் கொடுக்கப்பட்டவனாக வோ இருக்க வேண்டும். போதையுள்ளவன், பைத்தியக் காரன், விபரமில்லாத சிறுவன் ஆகியோர் அறுத்தது கூடாத தாகும். ஏனெனில் இவர்களில் விளங்கும் தன்மையில்லாத தால் அறுப்பதன் நோக்கம் இவர்களில் செல்லாது. மேலும் சிலை வணங்கக்கூடிய காபிரோ, நெருப்பு வணங்கியோ, கப்ருவ ணங்கியோ அறுத்ததும் ஹலாலாகாது.

2. அறுக்கும் கருவியை நன்றாகத் தீட்டிக்கொள்ள வேண்டும். இரத்தத்தை ஓட்டக்கூடிய இரும்பு, கல் அல்லது இது போன்ற கூர்மையானவற்றைக் கொண்டு அறுப்பது கூடும். பல் (எலும்பு), நகத்தைக் கொண்டு அறுப்பது கூடாது.

3. தொண்டையை- மூச்சுக் குழாயை அறுக்க வேண்டும். மேலும் உணவுக் குழாய், பிடரி நரம்புகளில் ஒரு நரம்பு ஆகி யவற்றையும் அறுக்க வேண்டும். குறிப்பாக இந்த இடத்தில் இவற்றை அறுப்பதற்குரிய தத்துவம் இரத்தத்தை வெளி யேற்றுவதேயாகும். ஏனெனில் இந்த இடம் தான் நரம்புகள் ஒன்று சேருமிடமாகும். மேலும் இது விரைவாக உயிர் பிரிவ தற்கு ஒரு வழியாகவும் பிராணிகளுக்கு சிரமமில்லாமல் இலேசாகவுமிருக்கும். அத்துடன் மாமிசம் மிகச் சுவையாக வும் இருக்கும்.

- மேலே கூறப்பட்ட பகுதியில் அறுக்க இயலவில்லையெனில்- உதாரணமாக வேட்டைப் பிராணி போன்று- அதன் உடலில் ஏதேனும் ஓர் இடத்தில் காயப்படுத்துவதன் மூலம் அதன் அறுப்பு நிறைவேறிவிடும்.
- கழுத்து நெறிக்கப்பட்ட, அடிபட்ட, உயரமான இடத்திலி ருந்து வீழ்ந்த, மோதப்பட்ட, கொடிய விலங்குகளால் கடித் துக் குதறப்பட்ட பிராணிகளை உண்பது கூடாது. ஆனால் அவை உயிர் பிரியாமல் இருந்து அவற்றை அறுத்து விட்டால் அவற்றைச் சாப்பிடுவது ஹலாலாகும்.

4. அறுக்கும்போது அறுக்கக் கூடியவன் பிஸ்மில்லாஹ் என்று கூற வேண்டும். அத்துடன் அல்லாஹு அக்பர் என்பதையும் சேர்த்துக் கூறுவது சுன்னத்தாகும்.

## அறுக்கும் ஒழுங்குமுறைகள்

1. பிராணிகளை கூர்மையற்ற ஆயுதங்களைக் கொண்டு அறுப்பதும், அவை பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஆயுதங்களைக் கூர்மைப்படுத்துவதும், கிப்லா அல்லாத திசைகளில் அவற்றைப் படுக்கவைத்து அறுப்பதும், அது மரணிக்கு முன் அதன் கழுத்தை வெட்டுவதும், தோலை உரிப்பதும் வெறுக்கத்தக்கதாகும்.
2. ஆடு, மாடுகளை இடது பக்கமாக படுக்கவைத்தும், ஒட்டகத்தை அதன் இடது காலைக் கட்டி நிறுத்தி வைத்தும் அறுப்பது சுன்னத்தாகும். அல்லாஹ் மிக அறிந்தவன்.

## வேட்டையாடுதல்

தேவைக்காக மிருகங்களை வேட்டையாடுவது கூடும். வீண், விளையாட்டுக்காக வேட்டையாடுவது மக்ரூஹ்-வெறுக்கத்தக்கதாகும். வேட்டையாடி பிடிபட்ட பிராணிக்கு இரு நிலைகள் உள்ளன.

1. உயிருடன் பெற்றுக் கொள்வது, அப்போது அதை அறுப்பது கட்டாயமாகும்.
2. இறந்த நிலையிலோ அல்லது நிலையற்ற உயிருடனோ பெற்றுக் கொள்ளப்பட்டால் அவை ஹலாலாகும்.

- அறுக்கக்கூடியவனுக்குரிய நிபந்தனைதான் வேட்டையாடக் கூடியவனுக்கும் உள்ளது. அவை வருமாறு:

1. புத்தி சீர் நிலை உள்ள முஸ்லிமாக அல்லது வேதக்காரனாக இருக்க வேண்டும். பைத்தியக்காரன், போதையில்

உள்ளவன், நெருப்பு வணங்கி, சிலை வணங்கி, கப்ரு வணங்கி போன்ற காஃபிர்கள் அறுத்தவற்றை முஸ்லிம் உண்ணக் கூடாது.

2. அறுக்கக்கூடிய ஆயுதம் இரத்தத்தை ஓட்டக்கூடிய வகையில் கூர்மையானதாக இருப்பது நிபந்தனையாகும். எலும்பு, நகத்தைக் கொண்டு அறுக்கக் கூடாது. வேட்டைப் பிராணியை ஆயுதத்தின் அழுத்தத்தினால் காயப்படுத்தாமல் அதன் கூர்மை கொண்டு காயப்படுத்தியிருக்க வேண்டும்.

- வேட்டையாடக்கூடிய நாய் மற்றும் பறவைகள் பயிற்றுவிக்கப்பட்டவையாக இருந்தால் அவை கொன்றவற்றை சாப்பிடுவது கூடும்.

பயிற்றுவிக்கப்பட்ட வேட்டைப் பிராணி என்பது அதைப் போ என அனுப்பி வைத்தால் போகும், வா என அழைத்தால் திரும்பி வரும். மேலும் அது ஒரு வேட்டையைப் பிடித்தால் தன் எஜமானனிடம் வரும் வரை எஜமானனுக்காகவே பிடித்து வைத்துக் கொள்ளும். தனக்காக பிடித்துக்கொள்ளாது.

3. வேட்டையாடுபவன் வேட்டைப் பிராணியை நோக்கி கருவியை எறிய வேண்டும். அவனது கையிலிருந்து ஆயுதம் கீழே விழுந்து ஒரு பிராணியைக் கொன்று விட்டால் அது அவனுக்கு ஹலாலாகாது. ஏனெனில் அதை வேட்டையாடுவது அவனது நோக்கமாக இருக்கவில்லை. ஒரு நாய் தானாகவே சென்று ஒரு பிராணியைக் கொன்றுவிட்டால் அதன் எஜமானன் அதை அனுப்பாததாலும் அவன் வேட்டையை நாடாததாலும் அவனுக்கு அது ஹலாலாகாது.

- ஒருவன் ஒரு பிராணியை எறிந்து அது வேறு பிராணியையோ அல்லது பிராணிகளின் ஒரு கூட்டத்தையோ கொன்று விட்டால் அவை அனைத்தும் அவனுக்கு ஹலாலாகிவிடும்.

4. அம்பை அல்லது காயப்படுத்தக் கூடியதை அனுப்பும்போது பிஸ்மில்லாஹ் என்று கூற வேண்டும். அத்துடன் அல்லாஹு அக்பர் என சேர்த்துக் கூறுவது சுன்னத்தாகும்.

குறிப்பு: நபி (ஸல்) அவர்கள் அனுமதி வழங்காத காரியங்களுக்காக நாய் வளர்ப்பது ஹராமாகும். அவர்கள் அனுமதி வழங்கியவை வேட்டை, கால்நடைகளைப் பாதுகாத்தல், விவசாயத்தைப் பாதுகாத்தல் ஆகிய மூன்று காரியங்களாகும்.

# أحكام النكاح

# திருமணத்தின் சட்டங்கள்

## திருமணத்திற்குரிய நிபந்தனைகள்

1. மணமகன், மணமகளின் சம்மதம்: தனக்கு விருப்பமில்லாத பெண்ணை திருமணம் செய்யுமாறு ஓர் ஆணையும், தனக்கு விருப்பமில்லாத ஆணை திருமணம் செய்யுமாறு ஒரு பெண்ணையும் வற்புறுத்தக் கூடாது. இஸ்லாம் பெண்ணின் சம்மதமில்லாமல் அவளுக்கு மணம் முடித்து வைப்பதைத் தடை செய்துள்ளது. ஒரு பெண் ஒருவனை மண முடிக்க மறுத்து விட்டால் அவளின் தந்தை உட்பட எவரும் அவனை மண முடித்துக் கொள்ளுமாறு அவளை வற்புத்துவது கூடாது.
2. வலி (பொறுப்பாளர்): பொறுப்பாளர் இல்லாமல் திருமணம் செல்லாது. ஏனெனில் பொறுப்பாளர் இல்லாமல் திருமணம் கூடாது என நபி (ஸல்) கூறியுள்ளார்கள். (திர்மிதி, அபூதாவூத்) ஒரு பெண் தானாகவே மணம் முடித்துக் கொண்டால் அது செல்லாது, அத்திருமணத்தை அவள் தானாக நடத்திக் கொண்டாலும் சரி அல்லது வேறு யாரிடத்திலும் அவள் பொறுப்பு ஒப்படைத்துக் கொண்டாலும் சரி.

- ஒரு முஸ்லிமான பெண்ணுக்கு காஃபிர் வலியாக முடியாது. பொறுப்பாளரில்லாத பெண்ணிற்கு அந்த ஊர்த் தலைவர் திருமணம் நடத்திவைப்பார்.
- பெண்ணின் உறவினரில் பருவமடைந்த, புத்தி சீரான, நேர் மையானவராக பொறுப்பாளர் இருக்க வேண்டும்.
- பொருப்பாளரின் வரிசை வருமாறு:

தந்தை பிறகு அவரால் வஸிய்யத் செய்யப்பட்டவர், பிறகு தந்தை வழிப் பாட்டன், தந்தை வழிப் பாட்டன் ஒன்றுக்கு மேற்பட்டவர் இருந்தால் அவர்களில் தந்தைக்கு மிகவும் நெருங்கியவர் வலியாக வருவார். பிறகு அவளின் மகன், பிறகு மகனுடைய மகன், இப்படியே எத்தனை தலைமுறை இறங்கிச் சென்றாலும் சரி. பிறகு அவளின் உடன் பிறந்த சகோதரன், பின்னர் தகப்பன் வழிச் சகோதரன், பின்னர் உடன்பிறந்த சகோதரனின் பிள்ளைகள், பின்பு தகப்பன் வழிச் சகோதரனின் பிள்ளைகள், பிறகு தாய் தகப்பனின் சிறிய, பெரிய தந்தை யர், பின்பு தகப்பன் வழி சிறிய, பெரிய தந்தையர், பின்பு அவர்களின் நெருக்கமான பிள்ளைகள், பின்பு அவளின் தகப்பனின் சிறிய, பெரிய தந்தையர் பின்பு அவர்களின் பிள்ளைகள். பின்பு பாட்டனின் சிறிய, பெரிய தந்தையர், பின்னர் அவனுடைய பிள்ளைகள்.

- பொறுப்பாளர் ஒரு பெண்ணை மண முடித்துக் கொடுக்கும் முன்னால் அவளிடம் அனுமதி கேட்டுக் கொள்வது அவசிய மாகும். பொறுப்பாளர் அவசியமென்பதன் நோக்கம் விபச் சாரத்திற்குரிய வழியை அடைத்துவிடுவதே. ஏனெனில் விபச் சாரம் செய்பவன் ஒரு பெண்ணிடம் உனக்கு இவ்வளவு தருகிறேன் என்னை மணந்து கொள் எனக் கூறி தனது நண்பர்களில் அல்லது மற்றவர்களில் இருவரை சாட்சியாக் கிக் கொள்வது ஒன்றும் இயலாத காரியமல்ல.

3. இரு சாட்சிகள்: திருமண ஒப்பந்தம் நடைபெறுகிறபோது முஸ்லிம்களில் நீதமுள்ள இருவரோ, இருவருக்கு மேற்பட்டவர்களோ பங்கு கொள்வது அவசியமாகும். அவர்கள் விபச்சாரம், மது அருந்துதல் போன்ற பெரும்பாவங்களில் ஈடுபடாதவர்களாகவும் நம்பத்தகுந்தவர்களாகவும் இருப்பது அவசியமாகும்.

திருமண ஒப்பந்தத்திற்குரிய வார்த்தை:

மணமகன் அல்லது அவனால் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டவர் ஒப்பந்த நேரத்தில் உங்களது மகளை எனக்கு அல்லது என் பொறுப்பாளருக்கு மணமுடித்துக் கொடுங்கள் என்று சொல்ல வேண்டும். அதற்கு வலீ- பெண்ணின் பொருப்பாளர் எனது மகளை அல்லது எனது பொறுப்பிலுள்ள இன்னவளை நான் உனக்கு மணமுடித்துத் தந்தேன் என்று கூற வேண்டும். மணமகன், இவளை மணமுடித்துத் தந்ததை நான் ஒப்புக் கொண்டேன் என்று சொல்ல வேண்டும். மணமகன் தான் விரும்பிய•வரைத் தனக்கு பொறுப்பாளராக நியமிக்கலாம்.

4. மஹ்ர் (மணக்கொடை): மணமகன் மணப் பெண்ணுக்கு மஹ்ர் கொடுப்பது கடமையாகும். மஹ்ரில் விரும்பத்தக்கது என்னவென்றால் அது குறைவாக இருப்பதாகும். மஹ்ர் எந்த அளவுக்கு குறைவாகவும் இலேசாகவும் உள்ளதோ அந்த அளவுக்கு அது சிறப்பானதாகும். மஹ்ருக்கு 'ஸதாக்' எனவும் சொல்லப்படும்.

- மஹ்ர் தொகையை திருமண ஒப்பந்த நேரத்தில் குறிப்பிடுவதும், அந்த நேரத்திலேயே அதைக் கொடுத்துவிடுவதும் சுன்னத்தாகும். எனினும் முழுவதையும் அல்லது அதில் ஒரு பகுதியை ஒரு தவணை வரை பிற்படுத்துவதும் கூடும்.
- ஒருவன் உடலுறவு கொள்ளுமுன் தன் மனைவியை விவாகரத்து செய்து விட்டால் மஹ்ரில் பாதியை அவள் எடுத்துக்

கொள்ள வேண்டும். திருமண ஒப்பந்தம் முடிந்து உடலுறவு கொள்ளுமுன் கணவன் இறந்து விட்டால் சொத்துரிமையும், முழு மஹ்ரும் அவளுக்குண்டு.

## திருமணத்திற்குப் பின்னுள்ள நடவடிக்கைகள்

**1. செலவுக்கு பணம் கொடுத்தல்**

கணவன் தன் மனைவிக்கு உணவு, பானம், உடை, தங்குமிடம் முதலியவற்றை நல்ல முறையில் செலவிட வேண்டும். அவசியமான இந்தச் செலவுகளில் எதையேனும் கொடுக்காமல் கஞ்சத்தனம் செய்தால் அவன் பாவியாவான். இந்நேரத்தில் அவனின் பொருளில் போதுமானதை அவள் எடுத்துக் கொள்வதோ அல்லது அவன் பெயரில் கடன் வாங்கிக் கொள்வதோ கூடும். அப்படி அவள் கடன் வாங்கிவிட்டால் அவன் அதை நிறைவேற்றுவது அவசியமாகும்.

வலீமா விருந்தும் அவன் செலவில்தான் நடத்த வேண்டும். வலீமா என்பது திருமண நாளில் கணவன் ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்து மக்களை அதற்கு அழைப்பதாகும். இது நபி (ஸல்) அவர்களால் ஏவப்பட்ட ஒரு சுன்னத்தாகும். அவர்களும் இதைச் செய்துள்ளார்கள்.

**2. சொத்துரிமை**

ஒருவன் ஒரு பெண்ணை எப்போது முறையாக திருமணம் செய்து கொண்டானோ அப்போதே அவர்கள் இருவருக்குமிடையே சொத்துரிமை ஏற்பட்டு விடுகிறது.

அல்லாஹ் கூறுகிறான்: உங்கள் மனைவியர் விட்டுச் சென்றதில்- அவர்களுக்கு பிள்ளைகள் இல்லையெனில் உங்களுக்குப் பாதி பாகமுண்டு. அவர்களுக்குப் பிள்ளையிருந்தால் அவர்கள் விட்டுச் சென்றதில் கால் பாகம்தான் கிடைக்கும் (இதுவும்) அவர்கள் செய்திருக்கிற மரண சாசனத்தையும்,

கடனையும் நிறைவேற்றிய பின்புதான். இன்னும் உங்களுக்கு பிள்ளைகளில்லாதிருந்தால் நீங்கள் விட்டுச் சென்றதில் அப் பெண்களுக்குக் கால் பாகம்தான்- உங்களுக்கு பிள்ளைகள் இருந்தால் அவர்களுக்கு நீங்கள் விட்டுச் சென்றதில் எட்டில் ஒரு பாகம்தான் கிடைக்கும். (இதுவும்) நீங்கள் செய்திருக் கும் மரண சாசனத்தையும், கடனையும் நிறைவேற்றிய பின்னர் தான். (4:12) இந்த சொத்துரிமையில் அவன் அவளுடன் உட லுறவு கொண்டாலும், உடலுறவு கொள்ளா விட்டாலும் எந்த வித்தியாசமுமில்லை.

## திருமணத்தின் சுன்னத்துகள், ஒழுங்குகள்

1. திருமணத்தை பகிரங்கமாக அறிவிப்புச் செய்வதும், மண மக்களுக்கு துஆச் செய்வதும் சுன்னத்தாகும். மணமகன் அல்லது மணமகளுக்கு

بَارَكَ اللهُ لَكَ وَ بَارَكَ عَلَيكَ وَجَمَعَ بَيْنَكُمَا فِي خَيْرٍ

பாரக்கல்லாஹு லக்க வபாரக்க அலைக்க வஜமஅ பைன குமா ஃபீ ஹைர் எனக் கூற வேண்டும்.

(பொருள்: அல்லாஹ் உம்மீதும் உமக்காக உள்ளவற் றின் மீதும் பரகத் செய்வானாக! உங்கள் இருவரையும் நலவில் ஒரு சேர வாழவைப்பானாக!)

2. உடலுறவு கொள்ள விரும்பும்போது

بِسْمِ اللهِ اَللّٰهُمَّ جَنِّبْنَا الشَّيطَانَ وَجَنِّبِ الشَّيْطَانَ مَارَزَقْتَنَا

பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வஜன்னிபிஷ் ஷைத்தான மாரஸக்தனா எனக் கூறுவது சுன்னத்தாகும்.

(பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு...!. இறைவா! எங்களை ஷைத்தானிடமிருந்து பாகாப்பாயாக!

மேலும் எந்தக் குழந்தைகளை எங்களுக்கு நீ வழங்கி னாயோ அவர்களையும் ஷைத்தானிடமிருந்து பாதுகாப் பாயாக!)

3. கணவன், மனைவி இருவரும் உடலுறவின் போது தங்களி டையே நடந்த விஷயங்களை வெளியே கூறுவது வெறுக் கத்தக்கதாகும்.

4. மாதவிடாய், பிரசவ இரத்தம் வரும் நேரத்திலும், அவ்விர ண்டும் நின்ற பிறகு குளித்து சுத்தமாகும் முன்பும் ஒருவன் தன் மனைவியிடம் உடலுறவு கொள்வது ஹராமாகும்.

5. பெண்ணின் பின் துவாரத்தில் உடலுறவு கொள்வது ஹரா மாகும். நிச்சயமாக இது இஸ்லாம் ஹராமாக்கிய பெரும் பாவங்களில் ஒன்றாகும்.

6. கணவன் உடலுறவில் தனது மனைவிக்குரிய உரிமையை முழுமையாக வழங்குவது கடமையாகும். மேலும் அவள் கர்ப்பமாவதை விரும்பாத காரணத்தால் 'அஸ்ல்' செய்யா மலிருப்பது அவனுக்குக் கடமையாகும். அவளது அனுமதி யையும் நிர்பந்தத்தையும் முன்னிட்டே தவிர!

(அஸ்ல் என்பது கருவுருவதைத் தவிர்ப்பதற்காக உட லுறவின்போது இந்திரியத்தை கருவறையில் செலுத்தாமல் வெளியேற்றுவதாகும். ஆணுறை, காப்பர்-டி போன்றவற்றை பயன்படுத்துவதும் இதன் அர்த்தத்தின் கீழ் வரும்)

## மனைவி எப்படி இருக்க வேண்டும்?

திருமணத்தின் நோக்கம் சுகம் அனுபவிப்பதும், நல்ல குடும் பத்தையும் ஆரோக்கியமான சமுதாயத்தையும் உருவாக்கு வதும் ஆகும். திருமணமாகக்கூடிய பெண் இவ்விரு நோக்கங் களும் முழுமையாக நிறைவேறக்கூடிய வகையில் இருக்க வேண்டும். அவள்தான் புற, அக அழகுள்ளவளெனக் கூறத்

தகுந்தவள். புற அழகு என்பது பரிபூரணமான உடலமைப்பு இருப்பதாகும். அக அழகென்பது மார்க்கமும் நற்குணமும் பரிபூரணமாக இருப்பதாகும் புற, அக அழகுள்ள பெண்ணை திருமண முடித்துக் கொள்ள முடியுமானால் அல்லாஹ்வின் நல்லுதவியால் அதுவே பரிபூரணமும், நற்பாக்கியமுமாகும். இதுபோன்றே இறையச்சமுள்ள, நல்லொழுக்கமுள்ள ஆணை மணந்து கொள்வதற்கு பெண்ணும் ஆர்வம் காட்டவேண்டும்.

## மணம் புரிவதற்கு விலக்கப்பட்ட பெண்கள்

இவர்கள் இரு வகையினராவர்: நிரந்தரமாக விலக்கப்பட்டவர்கள், குறிப்பிட்ட காலம் வரை விலக்கப்பட்டவர்கள்.

நிரந்தரமாக விலக்கப்பட்டவர்கள் மூன்று வகையினர்:

### 1. உறவு முறையால் விலக்கப்பட்டவர்கள்

இவர்கள் ஏழு பேர். அல்லாஹ் கூறுகிறான்: உங்களுக்கு (மணமுடிக்க) விலக்கப்பட்டவர்கள் உங்கள் தாய்மார்கள், உங்கள் புதல்வியர், உங்கள் சகோதரிகள், உங்கள் தந்தையரின் சகோதரிகள், உங்கள் தாயின் சகோதரிகள், உங்கள் சகோதரனின் புதல்வியர், உங்கள் சகோதரியின் புதல்வியர். (4:23)

அ) தாய்மார்கள்: இவர்களில் தாயும், தாய், தந்தை வழிப் பாட்டியரும் அடங்குவர்.

ஆ) புதல்வியர்: இவர்களில் சொந்தப் புதல்வியர்களும், மகன் வழிப் பேத்திகளும் மகள் வழிப் பேத்திகளும் அடங்குவர்.

இ) சகோதரிகள்: இவர்களில் உடன் பிறந்த சகோதரிகளும், தாய் வழி, தந்தை வழிச் சகோதரிகளும் அடங்குவர்.

ஈ) மாமியர்: இவர்களில் அவனுடைய மாமியரும், அவனுடைய தகப்பன், பாட்டன்களின் மாமியரும், அவனின் தாய்,பாட்டியரின் மாமியரும் அடங்குவர்.

உ) சிற்றன்னையர், பெரியன்னையர்: இவர்களில் அவனின் சிற்றன்னையரும், பெரியன்னையரும் அவனுடைய தந்தை, பாட்டனின் சிற்றன்னையரும், பெரியன்னையரும், அவனின் தாய், பாட்டியரின் சிற்றன்னையரும், பெரியன்னையரும் அடங்குவர்.

ஊ) சகோதரனின் புதல்வியர்: உடன் பிறந்த சகோதரனின் புதல்வியரும், தந்தை வழிச் சகோதரனின் புதல்வியரும், தாய் வழிச் சகோதரனின் புதல்வியரும், இவர்களின் புதல்வர்களின் புதல்வியரும், புதல்வியர்களின் புதல்வியர்களும் இப்படியே எத்தனை தலை முறை இறங்கிச் சென்றாலும் அனைவரும் அடங்குவர்.

எ) சகோதரியின் புதல்வியர்: இவர்களில் உடன் பிறந்த சகோதரியின் புதல்வியரும், தாய், தந்தை வழிச் சகோதரியின் புதல்வியரும், இவர்களின் புதல்வியரின் புதல்வியரும், அவர்களின் புதல்வியரின் புதல்வியரும் இப்படியே எத்தனை தலை முறை இறங்கிச் சென்றாலும் அனைவரும் அடங்குவர்.

## 2. பால்குடியினால் விலக்கப்பட்ட பெண்கள்

இவர்கள் உறவு முறையால் விலக்கப்பட்டவர்கள் போன்று தான் 'உறவு முறையில் விலக்கப்பட்டவர்கள் பால்குடி உறவிலும் விலக்கப்பட்டவர்களே'(நபிமொழி) எனினும் பால்குடியினால் விலக்கப்படுவதற்கு சில நிபந்தனைகள் உள்ளன. அவை:

1. ஐந்து அல்லது அதற்கதிகமான தடவைகள் வாய் வைத்து பால் குடித்திருக்க வேண்டும். ஒரு குழந்தை ஒரு பெண்ணிடம் ஒரு தடவையில் நான்கு மிடர் பால் குடித்திருந்தால் அவள் அவனுக்குத் தாயாக மாட்டாள்.

2. பால்குடி மறப்பதற்கு முன் பால் குடித்திருக்க வேண்டும். அதாவது அந்த ஐந்து தடவையும் பால்குடி மறப்பதற்கு முன்பாக இருக்க வேண்டும். அதன் பின்னராக இருந்தால்

அல்லது சில தடவைகள் பால்குடி மறப்பதற்கு முன்பும் சில தடவைகள் பின்புமாக இருந்தால் அவள் அக்குழந்தைக்கு தாயாகமாட்டாள். பால்குடியின் இந்நிபந்தனைகள் பூரணமாகிவிட்டால் அக்குழந்தை அப்பெண்ணுக்கு பிள்ளையாகிவிடுகிறது. அவளின் பிள்ளைகள் இக்குழந்தைக்கு உடன்பிறந்தவர்களாகிவிடுகிறார்கள். அப்பிள்ளைகள் இக்குழந்தை பால்குடிக்கும் முன் பிறந்திருந்தாலும் சரி அல்லது பிறகு பிறந்திருந்தாலும் சரி. பாலூட்டியவளின் கணவனின் பிள்ளைகளும் இக்குழந்தைக்கு உடன் பிறந்தவர்களாகிவிடுகிறார்கள். அப்பிள்ளைகள் இவனுக்கு பாலூட்டியவளின் பிள்ளைகளாக இருந்தாலும் சரி அல்லது மாற்றாந் தாயின் பிள்ளை களாக இருந்தாலும் சரி.

இந்த இடத்தில் ஒன்றை நாம் அறிந்து கொள்வது அவசியமாகிறது. அதாவது பால் குடித்த குழந்தையின் உறவினர்களில் அதனுடைய சந்ததியினரைத் தவிர வேறு யாருக்கும் அந்த பால்குடியில் சம்பந்தமில்லை. அதனால் எவ்வித மாறுதலும் ஏற்படாது.

### 3. திருமண உறவால் விலக்கப்பட்ட பெண்கள்

1. **தகப்பன், பாட்டனின் மனைவியர்:** ஒருவன் எப்போது ஒரு பெண்ணைத் திருமண ஒப்பந்தம் செய்துவிடுகிறானோ அப்போதே அப்பெண் அவனுடைய மகன்களுக்கும், மகனுடைய மகன்களுக்கும், மகளுடைய மகன்கள் இப்படியே எத்தனை தலை முறை இறங்கிச் சென்றாலும் அவர்கள் அனைவருக்கும் ஹராமாகிவிடுகிறாள். அவளுடன் அவன் உடலுறவு கொள்ளாமலிருந்தாலும் சரி.
2. **மகன்களின் மனைவியர்:** ஒருவன் எப்போது ஒருத்தியைத் திருமண ஒப்பந்தம் செய்துவிடுகிறானோ அப்போதே அவனுடைய தகப்பன், பாட்டன்கள் இப்படியே எத்தனை தலை

முறையானாலும் அவர்களுக்கு இத்திருமண ஒப்பந்தத்தி னால் மட்டுமே அவள் ஹராமாகி விடுகிறாள். இவர்கள் தந்தை வழியிலுள்ளவர்களானாலும் சரி, தாய் வழியிலுள்ள வர்களானாலும் சரி. அவளுடன் அவன் உடலுறவு கொள் ளாவிட்டாலும் சரி.

3. மனைவியின் தாயும், அவளுடைய பாட்டிகளும்: ஒருவன் ஒரு பெண்ணை எப்போது திருமண ஒப்பந்தம் செய்து விடுகிறானோ அப்போதே அத்திருமண ஒப்பந்தத்தினால் மட்டும் அவளுடைய தாயும் பாட்டிகளும் அவனுக்கு ஹரா மாகிவிடுகிறார்கள். அவளுடன் அவன் உடலுறவு கொள்ள வில்லையென்றாலும் சரி. அப்பாட்டிகள் தகப்பன் வழியா யினும் சரி அல்லது தாய் வழியாயினும் சரி.
4. மனைவியின் மகள்களும், அவளின் மகன்கள் மற்றும் மகள் களின்- மகள்களும் இவர்கள் எத்தனை தலை முறையா னாலும் சரி: ஒருவன் ஒரு பெண்ணை மணமுடித்து அவளு டன் எப்போது உடலுறவு கொள்கிறானோ அப்போதே இவர் கள் அவனுக்கு ஹராமாகிவிடுகிறார்கள். இவர்கள் இவன் மணமுடிப்பதற்கு முன் பிறந்தவர்களாயிருந்தாலும் அல்லது அதற்குப் பின் பிறந்தவர்களாயிருந்தாலும் சரியே. அவர்களி ருவருக்குமிடையே உடலுறவுக்கு முன்பே பிரிவு ஏற்பட்டு விட்டால் இவர் கள் அவனுக்கு ஹராமாகமாட்டார்கள்.

## குறிப்பிட்ட காலம் வரை விலக்கப்பட்ட பெண்கள்

இவர்கள் பல வகையினர்.

1. மனைவியின் சகோதரி, அவளுடைய தந்தையின் சகோதரி மற்றும் தாயின் சகோதரி: மனைவி மரணமடையும் வரை அல்லது மணவிலக்கால் அவளைப் பிரிந்து இத்தா முடிவ டையும் வரை இவர்கள் அவனுக்கு ஹராமாவார்கள்.
2. கணவன் மரணமடைந்தால் இத்தா இருப்பவள்: அதாவது ஒரு பெண் அவளுடைய கணவன் இறந்து இத்தா இருந்து

கொண்டிருந்தால் அவளை மணமுடிப்பதும் பெண் கேட்டுச் செல்வதும் கூடாது இத்தா காலம் முடியும் வரை!

3. ஹஜ், உம்ராவிற்காக இஹ்ராம் கட்டியிருப்பவளை அவள் இஹ்ராமிலிருந்து விடுபடும் வரை மணமுடிப்பது கூடாது.

## தலாக்- விவாகரத்து

தலாக் கூறுவது வெறுக்கத்தக்கதாகும். எனினும் ஒரு பெண் தனது கணவனுடன் வாழ்க்கையைத் தொடர்வதால் அல்லது ஒரு கணவன் தன்னுடைய மனைவியுடன் வாழ்க்கையைத் தொடர்வதால் துன்பம் அடைவதனால் சில நேரங்களில் விவாகரத்து இன்றியமையாததாக ஆனபோது அல்லது வேறு காரணங்களுக்காக அது அவசியமானபோது அல்லாஹ் தன் அடியார்களுக்கு விவாகரத்தை ஆகுமாக்கியது அவனுடைய அருளில் ஒன்றானது. எனவே ஒருவன் தன் மனைவியை வெறுத்து அவளுடன் வாழ்க்கை நடத்துவதை பொறுத்துக் கொள்ள முடியவில்லையானால் அவளை தலாக் சொல்வதில் குற்றமில்லை. எனினும் பின்வரும் ஒழுங்கு முறைகளைப் பேணுவது அவசியமாகும்.

1. மாதவிடாய் காலத்தில் தலாக் சொல்லக் கூடாது. அவ்வாறு தலாக் சொல்லி விட்டால் அவன் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்தவனாகவும், ஹராமைச் செய்தவனாகவும் ஆகிவிடுகிறான். இந்நேரத்தில் அவளை மீண்டும் அழைத்து, அவள் துப்பரவாகும் வரை வீட்டுவைப்பது கடமையாகும். பின்னர் விரும்பினால் அவளை தலாக் சொல்வான். மிகச் சிறந்த முறையாதெனில் இரண்டாம் முறை மாதவிடாய் ஏற்படும் வரை தலாக் சொல்லாமலிருப்பதாகும் துப்பரவாகிவிட்டால் விரும்பினால் தன்னுடன் வைத்துக் கொள்வான், விரும்பினால் தலாக்கும் சொல்வான்.

2. அவள் தூய்மையாக இருக்கும்போது அவளுடன் உடலுறவு கொண்ட நிலையில் தலாக் சொல்லக் கூடாது அவள் கருவுற்றிருப்பது தெளிவானாலே தவிர! ஒருவன் தன் மனைவியை, அவள் மாதவிடாயிலிருந்து சுத்தமான பிறகு அவளிடம் உடலுறவு வைத்துக் கொண்டு பிறகு தலாக் சொல்ல விரும்பினால் மீண்டும் அவளுக்கு மாதவிலக்கு ஏற்பட்டு அதிலிருந்து அவள் சுத்தமாகாத வரை அவளை தலாக் சொல்லக் கூடாது. அதனால் நாட்கள் அதிகமானாலும் சரியே. அவள் சுத்தமாகி விட்டால் அவளுடன் உடலுறவு கொள்ளும் முன்னால் விரும்பினால் அவளை அவன் தலாக் சொல்லலாம். ஆனால் அவள் கருவுற்றிருப்பது தெளிவாகி விட்டால் அல்லது அவள் கர்ப்பிணியாக இருந்தால் அவளை தலாக் விடுவதில் குற்றமில்லை.

## தலாக்கினால் ஏற்படும் விளைவுகள்

தலாக் என்பது மனைவியை பிரிந்துவிடுவது என்றாகி விட்ட போது அப்படி பிரிவதன் விளைவால் அநேக சட்ட நிலைகள் ஏற்படுகின்றன. அவை வருமாறு:

1. கணவன் தன் மனைவியிடம் தனித்திருந்த பிறகு அல்லது உடலுறவு கொண்ட பின் தலாக் சொன்னால் அவள் இத்தா இருப்பது அவசியமாகும். அவளுடன் உடலுறவு கொள்வதற்கோ அல்லது தனித்திருப்பதற்கோ முன்பு தலாக் சொல்லியிருந்தால் இத்தா வேண்டியதில்லை.

- இத்தா என்பது மாதவிடாய் வரக்கூடிய பெண்ணாக இருந்தால் மூன்று மாதவிடாய்கள். மாதவிடாய் வராதவளாக இருந்தால் மூன்று மாதங்கள் காத்திருப்பதாகும். கர்ப்பமுற்றவளாக இருந்தால் குழந்தையைப் பெற்றெடுப்பது வரை காத்திருப்பதாகும்.

- இத்தாவின் நோக்கம் தலாக் சொல்லப்பட்டவளை திரும்ப அழைத்துக் கொள்வதற்கான சந்தர்ப்பத்தைக் கணவனுக்கு வழங்குவதாகும். அதுபோல அவள் கர்ப்பமுற்றிருக்கிறாளா? இல்லையா? என்பதை உறுதி செய்வதுமாகும்.

2. ஒருவன் தன் மனைவியை இதற்கு முன்பு இரண்டு தடவைகள் தலாக் சொல்லியிருந்தால் அவனுக்கு அவள் ஹராமாகிவிடுகிறாள். அதாவது ஒருவன் தன் மனைவியை ஒரு தடவை தலாக் சொல்லிவிட்டு இத்தா காலத்திலேயே அவளை திரும்ப அழைத்துக் கொள்கிறான் அல்லது இத்தா முடிந்து திருமணத்தைப் புதுப்பித்துக் கொள்கிறான். அதன் பிறகுஇரண்டாம் முறை தலாக் சொல்லிவிட்டு இத்தா கால த்திலேயே திரும்ப அழைத்துக் கொள்கிறான் அல்லது இத்தா முடிந்து திருமணத்தைப் புதுப்பித்துக் கொள்கிறான். பிறகு மூன்றாம் முறை தலாக் சொல்லிவிட்டால் அவன் அப்பெண்ணை மணந்துகொள்ள முடியாது. ஆனால் அவள் வேறொருவனை முறையாக திருமணம் செய்து, அவன் அவளுடன் உடலுறவு கொண்டு பிறகு அவளை அவன் விரும்பாமல் தலாக் கூறினால் இப்போது அவள் முதல் கணவனுக்கு ஹலாலாகிவிடுகிறாள். மூன்று முறை தலாக் விட்டவர்கள் மீது அப்பெண்ணை அல்லாஹ் ஹராமாக்கியிருப்பது அவர்களின் கணவர்கள் செய்யும் அநீதியைத் தடுத்து அவர்களுக்கு அல்லாஹ் கிருபை செய்திருப்பதாகும்.

## குல்வு

இது ஒரு பெண் தனக்குப் பிடிக்காத கணவனை விட்டும் விலகுவதற்காக அவன் கொடுத்த மஹ்ரைத் திருப்பிக் கொடுத்து விவாகரத்தை வேண்டுவதாகும். கணவன் அவளை வெறுத்து அவளைப் பிரிந்துவிட விரும்பினால் அவளிடமிருந்து

மஹர் தொகையை வாங்க உரிமை கிடையாது. அவனுக்குரிய உரிமை அவளிடம் பொறுமையாகயிருப்பது அல்லது விவாக ரத்து செய்வதுதான்.

கணவன் தனது மனைவி தன்னை விட்டும் பிரிந்து போக வேண்டுமென்பதற்காக நோவினை செய்யக் கூடாது என்பது போல பெண் அவனால் துன்பம் அடைந்து அவனுடன் பொறு மையாக இருக்க முடியவில்லையானால்தான் பிரிந்து போவ தைக் கோர வேண்டும். கணவன் அவளுக்குக் கொடுத்த மஹரை விடவும் கூடுதலாக அவளிடம் வாங்காமலிருப்பது விரும்பத்தக்கதாகும்.

## திருமணத்தில் நீடிப்பதற்கான அல்லது அதை முறிப்பதற்கான அதிகாரம்

கணவன், மனைவி இருவருக்கும் திருமண ஒப்பந்தத்தைத் தக்க வைத்துக் கொள்வதற்கும் ஏதேனுமொரு காரணத்திற் காக அதை ரத்து செய்வதற்கும் அதிகாரம் இருக்கிறது.

உதாரணமாக கணவன் மனைவியிடமோ, மனைவி கணவ னிடமோ நோயையோ, அல்லது இயற்கையான குறையையோ காண்பது போல! இக்குறையை திருமண ஒப்பந்த நேரத்தில் அவனிடமோ அவளிடமோ சொல்லப்படவுமில்லை! இந்நேரத் தில் இருவருக்கும் திருமண ஒப்பந்தத்தைத் தக்கவைத்துக் கொள்ளவோ முறித்துவிடவோ அதிகாரம் இருக்கிறது. உதார ணமாக,

1. அவ்விருவரில் ஒருவர் பைத்தியம் பிடித்தவராக இருப்பது அல்லது திருமணத்தின் பூரண உரிமையை பாழாக்கிவிடக் கூடிய நோயால் பீடிக்கப்பட்டவராகயிருப்பது. இந்நேரத்தில் பாதிக்கப்பட்டவர் திருமண ஒப்பந்தத்தை முறித்துவிடுவது கூடும். இது உடலுறவுக்கு முன் இருக்குமானால் கணவன்

அவளுக்குக் கொடுத்த மஹரைத் திரும்பப் பெற்றுக் கொள் வது கூடும். உடலுறவுக்குப் பின்னர் என்றால் எதனையும் திரும்பப் பெறக் கூடாது. அவளுடைய உறவினர்களில் யார் அந்தக் குறையை அறிந்திருந்து ஏமாற்றினாரோ அவரிடம் அந்த மஹரை கணவன் திருப்பிக் கேட்பார் என்றொரு கருத்து உள்ளது.

2. ரொக்க மஹர் கொடுக்க முடியாமலாகிவிடுவது! இந்த நேரத்தில் திருமண ஒப்பநதத்தை முறிப்பதில் பெண்ணுக் குரிய உரிமை உடலுறவுக்கு முன்தான். உடலுறவுக்குப் பிறகு அந்த உரிமையில்லை.

3. அவளுக்கு செலவுக்கு பணம் கொடுக்க வசதியில்லாம லிருப்பது. ஒருவன் அவளுக்கு செலவுக்கு பணம் கொடுக்க வசதி பெறவில்லையெனில் அவள் முடிந்த அளவுக்கு எதிர் பார்க்க வேண்டும். அதன் பிறகு நீதிமன்றத்தை அணுகி திரு மணத்தை முறித்துக்கொள்ள அவளுக்கு உரிமை உண்டு.

4. கணவன் காணாமல் போய் அவன் இருக்குமிடம் தெரியவு மில்லை, தனது மனைவிக்கான செலவுத் தொகையை விட்டுவைத்திருக்கவுமில்லை, அவளுக்குச் செலவுக்குக் கொடுக்கும்படி யாரையும் பொறுப்பாக்கவுமில்லை, யாரும் அவளுக்கு செலவுக்குக் கொடுக்க முன்வரவும் இல்லை, அவளுக்கு செலவுக்குக் கொடுத்துவிட்டு அவளின் கணவ னிடம் திரும்பப் பெற்றுக்கொள்பவரும் இல்லை, இதுபோன்ற நேரங்களில் ஷரீஅத் நீதிபதியின் துணை கொண்டு திரு மணத்தை ரத்து செய்ய அவள் உரிமை பெறுகிறாள்.

## முஸ்லிமல்லாதவரை திருமணம் செய்வது

யூத, கிறிஸ்தவரல்லாத நிராகரிப்புக் கொள்கை உடைய பெண்ணை மணம் புரிவது முஸ்லிமுக்கு விலக்கப்பட்டதாகும்.

**மேலும் முஸ்லிம் பெண் முஸ்லிமல்லாதவனை மணமுடிப்பதும் கூடாது. அவன் யூதனகாவோ கிறிஸ்தவனாகவோ இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரியே! ஒரு பெண் தனது கணவனுக்கு முன்பே முஸ்லிமாகிவிட்டால் தன்னை சுகமனுபவிக்க தன் கணவனுக்கு இடமளிக்கக் கூடாது.**

## இதோ முஸ்லிமல்லாதவர்களை மணமுடிப்பதோடு மட்டும் தொடர்புடைய சில சட்டங்கள்:

1. கா∴பிரான கணவன், மனைவி இருவரும்- திருமணம் செய்ய விலக்கப்பட்ட (சகோதரி- மாமி போன்ற) உறவுடையவளாய் மனைவி இருப்பது போன்ற- அல்லது அவளை மணம் புரிவது அவனுக்கு ஹலால் அல்ல என்பது போன்ற மார்க்க ரீதியான தடை ஏதும் இல்லாத பட்சத்தில் அதே திருமணத்திலேயே அவர்களிருவரும் நீடிப்பார்கள். அப்படி தடை ஏதும் இருந்தால் அவ்விருவரையும் பிரித்து வைக்கப்படும்.
2. வேதக்காரியின் கணவன் இஸ்லாத்தைத் தழுவினால் அவர்களிருவரும் அதே திருமணத்திலேயே இருந்துகொள்ளலாம்.
3. வேதக்காரர்களல்லாத கணவன, மனைவி இருவரில் ஒருவர் உடலுறவுக்கு முன் இஸ்லாத்தைத் தழுவிவிட்டால் அவர்களின் நிகாஹ் முறிந்துவிடும்.
4. வேதக்காரனாக இருந்தாலும் சரி மற்றவனாக இருந்தாலும் சரி-முஸ்லிமல்லாதவனின் மனைவி உடலுறவுக்கு முன்பு முஸ்லிமாகிவிட்டால் நிகாஹ் முறிந்து போகும். ஏனெனில் முஸ்லிமானவள் கா∴பிருக்கு ஹலாலாக மாட்டாள்.
5. கா∴பிரின் மனைவி உடலுறவுக்குப் பின்பு முஸ்லிமாகி விட்டால் இத்தா முடியும் வரை அவளின் விஷயம் நிறுத்தி வைக்கப்படும். இத்தா முடிந்த பிறகும் அவன் முஸ்லிமாகாவிடில் திருமணம் முறிந்துபோகும். பிறகு அவள் விரும்புகிறவரை மணந்து கொள்வாள். அவள் விரும்பினால் அவனை அவள்

எதிர்பார்த்திருக்கலாம். இந்த இடைக் காலத்தில் அவனிடம் அவளுக்கு எந்த உரிமையுமில்லை. இதுபோன்றே அவனுக்கும் அவளிடம் எந்த உரிமையும் கிடையாது. அவன் முஸ்லிமாகிவிட்டால் திருமணத்தைப் புதுப்பிக்காமலேயே அவன் அவளுக்கு கணவனாகி விடுகிறான். அவள் அவனை பல ஆண்டுகள் எதிர்பார்த்தாலும் சரி. வேதக்காரி அல்லாதவளின் கணவன் முஸ்லிமானாலும் இதே சட்டம்தான்.

6. உடலுறவுக்கு முன்பே மனைவி இஸ்லாத்தை விட்டும் மாறி விட்டால் திருமணம் முறிந்து விடும். அவளுக்கு மஹரும் கிடையாது. இதுபோல் கணவன் இஸ்லாத்தை விட்டும் மாறி விட்டால் திருமணம் முறிந்து விடும். அவன் பாதி மஹர் கொடுக்க வேண்டும். அவ்விருவரில் இஸ்லாத்தை விட்டும் வெளியேறிய ஒருவர் இஸ்லாத்தில் இணைந்து விட்டால் அவர்கள் இருவருக்குமிடையே தலாக் ஏற்படாமலிருந்தால் முந்தைய திருமணத்தின் அடிப்படையிலேயே அவர்களிருவரும் இருந்து கொள்வார்கள்.

## வேதக்காரிகளை மணப்பதன் தீங்குகள்

அல்லாஹ் திருமணத்தை அனுமதித்திருப்பதன் நோக்கம் பண்பாட்டைச் சீர்படுத்துவதும், சீர்கேடுகளிலிருந்து சமுதாயத்தைத் தூய்மைப்படுத்துவதும், கற்பு நெறியைப் பாதுகாத்துக் கொள்வதும், சமூகத்தில் தூய்மையான இஸ்லாமிய கட்டுக் கோப்பை நிலை நிறுத்துவதும், வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் தூதரென சான்று பகரக்கூடிய சமுதாயத்தைத் தோற்றுவிப்பதும்தான். மார்க்கப் பற்றும், சிறப்பும், நற்குணமும் நல்லொழுக்கமும் உள்ள பெண்ணை மணமுடிப்பதன் மூலம் தான் இதுபோன்ற சீர்திருத்தங்கள் ஏற்படும்.

வேதக்காரப் பெண்ணை ஒரு முஸ்லிம் மணமுடிப்பதால் ஏற்படும் விளைவுகளையும் தீங்குகளையும் நாம் சுருக்கமாகக் கீழே தருகிறோம்.

1. குடும்பத்தினுள்: சிறிய குடும்பத்திற்குள் கணவன் செல்வாக்கு உள்ளவனாக இருந்தால் அது பெண்ணிடத்தில் மாற்றத்தை ஏற்படுத்தி பெரும்பாலும் அவள் இஸ்லாம் குறித்து திருப்தி கொள்ளலாம். சில சமயம் இதற்கு மாறான நிலையும் உருவாகலாம். அப்பெண் இஸ்லாம் அல்லாத தனது மார்க்கத்தைப் பற்றிப் பிடிப்பவளாக இருந்து மது அருந்துதல், பன்றி இறைச்சி உண்ணுதல், கள்ளக் காதலனை வைத்துக் கொள்ளல் போன்றவற்றை தனது மார்க்கம் அனுமதிக்கிறது என்று எண்ணிச் செயல்படுபவளாகவும் ஆகிவிடலாம். இதன் காரணமாக அவளும் அவளின் குடும்பமும் சிதறுண்டு, பண்பாடுகள் கட்டவிழ்ந்து போகும். குழந்தைகள் தீய வழியில் வளர்ந்து விடுவார்கள்.

சில சமயம் நிலைமை மேலும் மோசமாகிவிடும். மதமாச்சரியமும் பிடிவாதமுமுள்ள மனைவி தன் குழந்தைகளை வேண்டுமென்றே சர்ச்சுகளுக்கு அழைத்துச் சென்றால் கிறிஸ்தவர்களின் வணக்க முறைகளை அவர்களும் பழகிக்கொள்வார்கள். இளமையில் வருவது தான் முதுமையிலும் வரும்.

2. சமூகத்தில் ஏற்படும் விளைவுகள்: முஸ்லிம் சமுதாயத்தினுள் வேதக்காரிகள் அதிகரிப்பது ஆபத்தான விஷயமாகும். சமூகத்தில் அதனால் ஆபத்து என்னவெனில் இஸ்லாமிய சமுதாயம் வீழ்ச்சியடைந்து கிறிஸ்தவ சமுதாயத்தின் உலகாயத வாழ்க்கைத் தரம் உயர்ந்திருக்கின்ற நிலையில்-இன்றைக்கு இது இருக்கின்றது- இப்பெண்கள் இஸ்லாமியச் சமுதாயத்தினுள் ஆபத்தான சிந்தனை ரீதியான யுத்தத்திற்கு தூது செல்பவர்களாக ஆகிவிடுகிறார்கள். இன்னும் இதைத் தொடர்ந்து சமுதாயக் கட்டுப்பாடுகள், பண்பாடுகள் சீர்குலைந்து போய்

விடுவதோடு கிறிஸ்தவக் கலாச்சாரங்களும் நுழைந்து விடு கின்றன. இவற்றின் பட்டியலில் முதல் வரிசையில் இருப்பது அறை குறை ஆடைகளுடன் ஆண்களும், பெண்களும் கலந்து றவாடும் பழக்கமும், இஸ்லாமிய போதனைகளுக்கு மாற்றமான சில பழக்கங்களும் தான்!

## فضل صلاة الجمعة وآدابها

## ஜும்ஆத் தொழுகையின் சிறப்பும் ஒழுங்கும்

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒருவர் வெள்ளிக்கிழமை பெருந்தொடக்கை நீக்குவதற்கு குளிப்பது போலக் குளித்து முதல் நேரத்தில் பள்ளிக்குச் சென்றால் அவர் ஒரு ஒட்டகத் தைக் குர்பானி கொடுத்தவர் போன்றும் இரண்டாவது நேரத் தில் செல்பவர் ஒருமாட்டைக் குர்பானி கொடுத்தவர் போன் றும் மூன்றாவது நேரத்தில் செல்பவர் ஒரு கொம்புள்ள ஆட் டைக் குர்பானி கொடுத்தவர் போன்றும் நான்காவது நேரத் தில் செல்பவர் ஒரு கோழியையைக் குர்பானி கொடுத்தவர் போன்றும் ஐந்தாம் நேரத்தில் செல்பவர் ஒரு முட்டையைக் குர் பானி கொடுத்தவர் போலவும் ஆகிவிடுகின்றனர். இமாம் வந்து விட்டால் பள்ளியின் வாசலிலிருந்து வருவோரின் பெயர்களை எழுதிக்கொண்டிருந்த வானவர்கள் ஜும்ஆப் பிரசங்கத்தைக் கேட்க வந்துவிடுகின்றார்கள். (முஸ்லிம்)

### ஜும்ஆவின் ஒழுங்குகள்

குளித்து நகம் வெட்டி வாசனைத் திரவியங்கள் பூசி தூய் மையான ஆடைகள் அணிய வேண்டும். (சமைக்காமல்) பச்சை யாகப் பூண்டு வெங்காயம் போன்ற வாடைவரும் பொருட்களை

உண்ணாமல் இருக்க வேண்டும். புகை பிடித்தல் கூடாது. நன்றாக பல் துலக்கிக்கொள்ள வேண்டும். பள்ளியில் நுழைந்ததும் இரு ரக்அத்துகள் தொழ வேண்டும். இமாம் பிரசங்கம் செய்து கொண்டிருந்தாலும் தொழ வேண்டும்.

நபி(ஸல்) கூறினார்கள்: உங்களில் ஒருவர் இமாம் பிரசங்கம் செய்யும்போது ஜும்ஆவுக்கு வந்தால் சுருக்கமாக இரண்டு ரக்அத்துகள் தொழுது கொள்ளட்டும். (புகாரி, முஸ்லிம்)

பிரசங்கம் நடக்கும்போது பேசாமல் செவிதாழ்த்திக் கேட்க வேண்டும். பின்பு ஜும்ஆவின் கடமையான இரண்டு ரக்அத்களை இமாமைப் பின்பற்றித் தொழுவதாக மனதில் எண்ணிக் கொள்ள வேண்டும். ஜும்ஆவிற்குப் பின் நான்கு ரக்அத்கள் சுன்னத்துத் தொழவேண்டும். அதில் 2 ரக்அத்களை வீட்டில் தொழுவது சிறப்பானது. நபி(ஸல்)அவர்கள் மீது அதிகம் ஸலவாத்துக் கூற வேண்டும். அதிகமாக துஆக் கேட்க வேண்டும்.

நபி(ஸல்) கூறினார்கள்: நிச்சயமாக வெள்ளிக் கிழமையில் ஒரு நேரம் உண்டு. அந்த நேரத்தில் ஒருவர் துஆக் கேட்டால் அல்லாஹ் அதைக் கொடுத்துவிடுகிறான். (புகாரி, முஸ்லிம்)

## بعض الآداب والسنن

## சில ஒழுக்கங்கள், சுன்னத்துக்கள்

1. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்: நபி(ஸல்) அவர்கள் பெருந்தொடக்குடன் தூங்க விரும்பினால் மர்ம உறுப்பைக் கழுவிட்டு தொழுகைக்குச் செய்வது போல் ஒழுச் செய்து கொள்வார்கள். (புகாரி, முஸ்லிம்)
2. நபி(ஸல்) கூறினார்கள்: நீங்கள் தூங்கச் செல்லும்போது விளக்குகளை அணைத்து விடுங்கள். அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி), நூல்: புகாரி, முஸ்லிம்

3. உங்களுக்கு விருப்பமானவற்றை கனவில் கண்டால் அது இறைவனிடமிருந்து வந்த நற்செய்தி என்று அறிந்து கொள் ளுங்கள். அதற்காக அல்லாஹ்வைப் புகழ்ந்து கொள்ளுங் கள். (முஸ்லிம்) அந்த நல்ல கனவை உங்களின் நண்பர்க ளிடம் மட்டும் கூறுங்கள். (புகாரி, முஸ்லிம்)

4. கனவில் உங்களுக்கு வெறுப்பானதைக் கண்டால் அது ஷைத்தானிடமிருந்து வந்ததென அறிந்து கொள்ளுங்கள். அதன் தீங்கிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்பும் தேடிக் கொள்ளுங்கள், அதை எவரிடமும் சொல்லாதீர்கள். மூன்று முறை இடது பக்கத்தில் துப்பிக் கொள்ளுங்கள். (புகாரி, முஸ்லிம்) தொழுது கொள்ள வேண்டும். (முஸ்லிம்)

அதன் பிறகும் தூங்க விரும்பினால் இடத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். இவ்வாறு செய்தால் அவனுக்கு எந்த தீங்கும் ஏற்படாது.

5. நள்ளிரவில் தூங்கி எழுந்தால் கூற வேண்டியது: நபி(ஸல்) கூறினார்கள்: யாரேனும் தூங்கி விழித்தால்

لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ، اَلْحَمْدُ لِلَّهِ وَسُبْحَانَ اللهِ وَلاَ إِلَهَ إِلاَّ اللهُ وَاللهُ أَكْبَرُ وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللهِ اَللَّهُمَّ اغْفِرْ لِيْ

லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்க லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷை யின் கதீர். அல்ஹம்து லில்லாஹி வஸுப்ஹானல்லாஹி வலாயிலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் வலாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹி அல்லாஹும் மக்ஃபிர்லீ எனக் கூறி தனக்காகப் பிரார்த்தித்து உளூச் செய்து தொழுதால் அவனது தொழுகை ஏற்றுக் கொள்ளப்படும்.

அறிவிப்பவர்: உபாததிப்னுஸ் ஸாமித் (ரலி) புகாரி, முஸ்லிம்

* அதிகாலையில் தூக்கத்திலிருந்து விழித்தால்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِي اَحْيَانَا بَعْدَ مَا اَمَاتَنَا وَاِلَيْهِ النُّشُوْر

அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா ப..தமா அமாதனா வஇலைஹின் நுஷூர் (புகாரி, முஸ்லிம்) எனக் கூற வேண்டும்.

(பொருள்: எங்களை மரணிக்கச் செய்த பின்னர் உயிர்த் தெழுப்பிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் மேலும் அவனி டமே நாம் மீண்டும் திரும்ப வேண்டியுள்ளது) இன்னும்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ عَافَانِيْ فِيْ جَسَدِيْ وَرَدَّ عَلَيَّ رَوْحِيْ وَأَذِنَ لِيْ بِذِكْرِهِ

அல்ஹம்து லில்லாஹில்லதீ ஆ..பானீ ..பீ ஜஸதி வரத்த அலய்ய ரூஹி வஅதினலீ பிதிக்ரிஹி (திர்மிதி)

(பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவனே என் உடலுக்கு சுகம் அளித்து என் உயிரை எனக்கு திருப் பித் தந்தான். மேலும் தன்னை நினைவு கூருவதற்கும் எனக்கு அனுமதியளித்தான்)

உங்களில் ஒருவர் தூங்கி விழித்தால் தனது கையை மூன்று முறை கழுவாமல் பாத்திரத்தில் நுழைக்க வேண் டாம். ஏனெனில் தனது கை இரவில் எங்கிருந்தது என அறியமாட்டார். (புகாரி, முஸ்லிம்)

உங்களில் ஒருவர் தூங்கி எழுந்து ஒழுச் செய்தால் மூன்று முறை நாசிக்குத் தண்ணீர் செலுத்திக் கொள்ளட் டும். நிச்சயமாக ஷைத்தான் இரவில் அவரது மூக்கின் தண்டு வடத்தில் இருக்கிறான். (புகாரி, முஸ்லிம்)

* மல ஜலம் கழிக்கச் சென்றால்

بِسْمِ اللهِ اَللّٰهُمَّ اِنِّي اَعُوذُ بِكَ مِنَ الْخُبْثِ وَالْخَبَائِث

பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம இன்னீ அவூது பிக்க மினல் குப்ஸி வல்கபாயிஸி. என்று கூற வேண்டும்

(பொருள்: இறைவா! ஆண் பெண் ஷைத்தான்களை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்)

வெளியே வந்ததும் غُفْرَانَكَ கு:ப்ரானக
எனக் கூற வேண்டும். (அஹ்மது, அபூதாவூது)

(இறைவா! உன்னிடம் மன்னிப்பை வேண்டுகிறேன்)

* உளூச் செய்ய ஆரம்பிக்கும்போது
பிஸ்மில்லாஹ் என்றும் முடித்தபின்

أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ

அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்கலஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு (இப்னுமாஜா)

(பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையும் இல்லை என்றும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் அவனது தூதரும் ஆவார்கள் என்றும் நான் சாட்சி சொல்கிறேன்) என்றும்

اَللَّهُمَّ اجْعَلْنِيْ مِنَ التَّوَّابِيْنَ وَاجْعَلْنِيْ مِنَ الْمُتَطَهِّرِيْنَ

அல்லாஹும் மஜ்அல்னீ மினத் தவ்வாபீன் வஜ்அல்னீ மினல் முததஹ்ஹிரீன் என்றும் கூற வேண்டும். (திர்மிதி)

(பொருள்: இறைவா! என்னை தவ்பா செய்யக் கூடியவர்களுள் ஒருவனாக ஆக்குவாயாக. மேலும் தூய்மை பெற்றவர்களுள் ஒருவனாகவும் ஆக்கியருள்வாயாக) என்றும் கூற வேண்டும்.

* பாங்கு சொல்லக் கேட்கும் போது
பாங்கு சொல்பவர் கூறு வதைப் போன்றே கூற வேண்டும். ஹய்ய அலஸ் ஸலாத் ஹய்ய அலல் :பலாஹ் எனக் கூறும்

போது மட்டும் லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் எனக் கூற வேண்டும். பாங்கு சொல்லி முடித்த பிறகு நபி (ஸல்) அவர்களின் மீது ஸலாவாத்துச் சொல்ல வேண்டும். அதன் பிறகு

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلاَ ةِ الْقَائِمَةِ آتِ مُحَمَّدًا الْوَسِيْلَةَ وَالْفَضِيْلَةَ

وَابْعَثْهُ مَقَامًا مَّحْمُودًا الَّذِي وَعَدْ تَهُ

அல்லாஹும்ம ரப்ப ஹாதிஹித் தஃவதித் தாம்மத்தி வஸ்ஸலாத்தில் காயிமத்தி ஆத்தி முஹம்மதனில் வஸீலத வல்ஃபழிலத்த வப்அஃத்ஹு மகாமம் மஹ்முதனில்லதீ வஅத்தஹு

(பொருள்: யா அல்லாஹ்! பரிபூரணமான அழைப்பிற்கும் நிலையான தொழுகைக்கும் உரிய இறைவனே! முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்கு (சுவர்க்கத்தில்) வஸீலா என்ற உயர் பதவியையும், சிறப்பையும் கொடுப்பாயாக. மேலும் நீ அவர் களுக்கு வாக்களித்த மஹ்முத் எனுமிடத்தில் அவர்களை எழுப்புவாயாக! (புகாரி, முஸ்லிம்)

* பள்ளியில் நுழையும் போது

اَعُوْ ذُ بِا للّٰهِ الْعَظِيْمِ وَبِوَجْهِهِ الْكَرِيْمِ وَسُلْطَانِهِ الْقَدِيْمِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ بِسْمِ

اللّٰهِ وَالصَّلاَةُ وَالسَّلاَمُ عَلٰى رَسُوْلِ اللّٰهِ اَللّٰهُمَّ افْتَحْ لِى اَبْوَابَ رَحْمَتِكَ

அவூது பில்லாஹில் அழீம் வபிவஜ்ஹிஹில் கரீம் வசுல்த் தானிஹில் கதீம் மினஷ் ஷைத்தானிர் ரஜீம் பிஸ்மில்லாஹி வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹி அல்லா ஹும் மஃப்த ஹ்லீ அப்வாப ரஹ்மதிக எனக் கூற வேண்டும். (முஸ்லிம், அபூதாவூத்)

பொருள்: மகத்துவமிக்க அல்லாஹ்வைக் கொண்டும் அவனது திருமுகத்தைக் கொண்டும் அவனது நிலையான

மேலாதிக்கத்தைக் கொண்டும் விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் பாதுகாப்பு தேடுகிறேன். அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு (நுழைகிறேன்) கருணையும் சாந்தியும் அவன் தூதர் மீது உண்டாகட்டும். இறைவா! உனது அருட்கொடையின் தலை வாயிலை எனக்குத் திறந்தருள்வாயாக!)

பள்ளியில் நுழைந்ததும் இரண்டு ரக்அத்துகள் தொழ வேண்டும். உங்களில் ஒருவர் பள்ளியில் நுழைந்தால் இரு ரக்அத்துகள் தொழாமல் உட்கார வேண்டாம் என்பது நபி மொழி. அறிவிப்பவர்: அபூகதாதா (ரலி), புகாரீ, முஸ்லிம்

## صلاة التراويح

## தராவீஹ் தொழுகை

ரமழான் இரவுகளில் தொழுவது மற்றைய இரவுகளில் தொழுவதை விட அதிகமான சிறப்பிற்குரியதாகும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யாராவது ரமழான் இரவுகளில் அல்லாஹ்வை நம்பியவராகவும் நன்மையைத் தேடியவராகவும் வணக்கங்களில் ஈடுபட்டால் அவருடைய முன் பாவங்கள் மன்னிக்கப் படுகின்றன. நபி (ஸல்) அவர்கள் தான் தராவீஹ் தொழுகையை முதலில் பள்ளியில் தொழுது சுன்னத்தாக்கினார்கள். பின்னர் அது தமது சமுதாயத்தவர் மீது கடமையாக்கப்பட்டு விடுமோ என்று பயந்து விட்டுவிட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு நாள் இரவு பள்ளியில் தொழுதார்கள். மக்களும் அவர்களுடன் சேர்ந்து தொழுதனர். மறுநாள் இரவும் நபி (ஸல்) தொழுதார்கள். அதிகமான மக்களும் தொழலானார்கள். 3 ஆம், 4 ஆம் இரவுகளில் மக்கள் கூடினார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்கள் வீட்டை விட்டு வெளியேறவில்லை.

நபி(ஸல்)அவர்கள் காலையில் எழுந்து நீங்கள் இரவில் கூடி யதை நான் அறிவேன். அத்தொழுகை உங்கள் மீது கடமை யாக்கப்பட்டுவிடுமோ எனப் பயந்ததால்தான் நான் வெளியே வரவில்லை என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

தராவீஹ் தொழுகை மற்றும் அதனுடன் சேர்த்து தொழும் வித்ரு தொழுகையில் நமது முன்னோர்கள் கருத்து வேறுபாடு கொண்டுள்ளனர். ரக்அதுகளின் எண்ணிக்கையில் 49, 39, 29, 13, 11 என பலவிதமான கருத்துக்கள் உள்ளன. இவற்றில் 11 ரக்அதும் 13 ரக்அதும் மட்டுமே ஆதாரப்பூர்வமானவை. ஏனெ னில் இதுபற்றி பின்வரும் ஸஹீஹான ஹதீஸ் வந்துள்ளது.

ஆயிஷா (ரலி) அவர்களிடம் நபி(ஸல்)அவர்களின் ரமழான் இரவுத் தொழுகை எப்படி இருந்தது? எனக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், ரமழானிலும் ரமழானல்லாத காலங்களிலும் நபி(ஸல்)அவர்கள், இரவுத் தொழுகையை 11 ரக்அத்துகளை விட அதிகமாக்கியதில்லை எனக் கூறினார்கள்.

மேலும் நபி(ஸல்)அவர்களின் இரவுத் தொழுகை 13 ரக்அத் ககளாக இருந்தது என இப்னு அப்பாஸ் (ரலி) கூறியுள்ளனர்.

உமர் (ரலி) அவர்கள், உபய்யிப்னு கஃபு (ரலி), தமீமுத்தாரீ (ரலி) ஆகிய இருவரையும் ரமழான் இரவுகளில் மக்களுக்கு 11 ரக்அத்துகள் தொழுகை நடத்தும்படி கட்டளையிட்டார்கள். (முஅத்தா) நமது முன்னோர்களான நல்லவர்கள் தராவீஹ் தொழுகையை நன்கு நீட்டித் தொழுபவர்களாக இருந்தனர். அவ்வாறே நாமும் தொழ வேண்டும்.

# حضور النساء لصلاة التراويح وفضل العشر الأواخر

# பெண்கள் பள்ளிக்கு வருவதும் லைலத்துல் கத்ரின் சிறப்பும்

தராவீஹ் தொழுகையின் நன்மையை அடைந்து கொள்வதற்காக அத்தொழுகைக்கு முந்தியே வருவது அவசியமாகும். மேலும் இரவெல்லாம் நின்று வணங்கிய நன்மையை அடைந்து கொள்வதற்காக தராவீஹையும் வித்ரையும் இமாமுடன் சேர்ந்து இறுதிவரை தொழுவது அவசியமாகும். பெண்களும் தராவீஹிற்கும் மற்றய தொழுகைகளுக்கும் பள்ளிக்கு வருவது கூடும். எனினும் அவர்களால் குழப்பம் ஏற்படுமென்ற அச்சம் இல்லாதிருக்க வேண்டும். குழப்பம் ஏற்படுமென்றிருக்குமானால் அவர்கள் பள்ளிக்கு வரக் கூடாது. 'பள்ளிகளுக்கு அல்லாஹ்வின் அடிமைகளான பெண்கள் வருவதைத் தடுக்காதீர்கள்' என நபி(ஸல்) கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்)

மேலும் பெண்கள் பள்ளிக்கு வருவது நமது முன்னோர்களான ஸஹாபாக்கள் மற்றும் அவர்களைப் பின்பற்றிய தாபியீன்களின் செயல்களிலுள்ளதாகும். எனினும் அவர்கள் மார்க்க முறைப்படி தங்களை மூடி மறைத்து, வாசனைப் பொருட்களைப் பயன்படுத்தாமலும், அலங்காரங்களை வெளிப்படுத்தாமலும் வருவது அவசியமாகும்.

அல்லாஹ் கூறுகிறான்: பெண்கள் தங்கள் அழகலங்காரத்தை அதிலிருந்து (சாதரணமாக வெளியில்) தெரியக் கூடியதைத் தவிர (வேறு எதையும்) வெளிக் காட்டக் கூடாது. (24:31)

நிச்சயமாக நாம் இதனை (குர்ஆனை) மாட்சிமை மிக்க இரவில் இறக்கி வைத்தோம். மேலும் மாட்சி மை மிக்க இரவு என்னவென்று உமக்குத் தெரியுமா என்ன? மாட்சிமை மிக்க

**இரவு ஆயிரம் மாதங்களை விடச் சிறந்தது ஆகும். அதில் வானவர்களும் ருஹூம் (ஜிப்ரீலும்) தம் இறைவனின் அனுமதியுடன் அனைத்துக் கட்டளைகளையும் ஏந்திய வண்ணம் இறங்குகின்றார்கள். அந்த இரவு முழுவதும் நலம் பொருந்தியதாகத் திகழ்கின்றது வைகறை உதயமாகும் வரை. (அத் 97)**

**நபீ(ஸல்)கூறினார்கள்: யார் லைலத்துல் கத்ரின் இரவில் நின்று வணங்குகிறாரோ அவரின் முன் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி)**

**லைலத்துல் கத்ர் என்னும் மகத்தான இரவு ரமழானின் பிந்திய பத்து இரவுகளில் இருக்கிறது. 'லைலத்துல் கத்ரை ரமழானின் கடைசி பத்து நாட்களின் ஒற்றைப்படை இரவுகளில் தேடிக்கொள்ளுங்கள் என்பது நபிமொழி (புகாரீ)**

**ரமழானின் பிந்திய பத்து இரவுகள் வந்து விட்டால் நபீ(ஸல்) அவர்கள் தமது ஆடையை வரிந்து கட்டிக் கொண்டு இரவில் கண்விழிப்பார்கள். தமது குடும்பத்தினரையும் விழிக்கச் செய்வார்கள். அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி), புகாரீ, முஸ்லிம்**

## حكم الجهر بالنية

## நிய்யத்தை மொழிவதன் சட்ட நிலை

**கேள்வி: சிலர் தொழுகைக்காக நின்றவுடன் நிய்யத்துக்காக நான் இன்ன தொழுகையை இமாமைப் பின்பற்றி கிப்லாவை முன்னோக்கி அல்லாஹ்வுக்காகத் தொழுகிறேன் என்றோ அல்லது இதன் கருத்தில் அமைந்த வேறு வாசகங்களையோ கூறுகின்றார்கள். இவ்வாறு கூறலாமா ?**

**பதில்: நிய்யத் என்பதன் பொருள் நினைத்தல் ஆகும். இது உள்ளத்துடன் மட்டும் தொடர்புடையதாகும். உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் அறிகின்றான். நபீ(ஸல்) அவர்கள்**

தொழுகைக்கு நின்றபோது 'இவ்வாறு நினைக்கிறேன்' என்று மொழிந்ததாக ஆதாரப்பூர்வமான எந்தக் குறிப்பும் கிடையாது. உள்ளத்துடன் மட்டும் தொடர்புடைய நிய்யத்தை சப்தமிட்டோ மெதுவாகவோ மொழிவது பித்அத்தாகும். வரையறுக்கப்பட்ட வணக்க வழிபாடுகளில் கூடுதலாக ஏதேனும் ஒன்றைச் சேர்ப்பது சந்தேகமின்றி பித்அத்துதான்.

1. நபி(ஸல்)அவர்கள் தொழுகைக்கு ஆயத்தமானதும் முதன் முதலில் தக்பீரையே மொழிவார்கள் என அன்னை ஆயிஷா (ரலி) அறிவிக்கும் செய்தி முஸ்லிமில் பதிவாகி உள்ளது.
2. முறையின்றி தொழுத ஒரு தோழருக்கு தொழுகையின் சரியான முறையை நபி(ஸல்) அவர்கள் கற்றுக் கொடுக்கும் போது 'தொழுகைக்கு நீ தயாரானதும் பூரணமாக உளூச் செய். பின்னர் கிப்லாவை முன்னோக்கி தக்பீர் கூறு. பிறகு திருக்குர்ஆனில் உனக்கு இலகுவானதை ஓது' எனக் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), புகாரீ, முஸ்லிம்.

எனவே நபி(ஸல்)அவர்கள் காட்டித்தராத ஒன்றை வணக்க வழிபாடாகச் சேர்ப்போருக்கு பின்வரும் எச்சரிக்கையையும் அறிவிக்கின்றோம். 'எவர்கள் அவருடைய (இறைத்தூதரின்) கட்டளைக்கு மாறு செய்கின்றார்களோ அவர்கள் தங்களை சோதனை பிடித்துக் கொள்வதையோ அல்லது நோவினை தரும் வேதனை பிடித்துக் கொள்வதையோ அஞ்சிக் கொள்ளட்டும்.'(24:63) அல்லாஹ் மிக அறிந்தவன்.

## புகை பிடித்தல் – التدخين

புகை பிடிப்பது ஹராமாகும். அல்லாஹ் கூறுகிறான்: உங்களுடைய கரங்களால் உங்களுக்கு அழிவைத் தேடிக்கொள்ளாதீர்கள். (2:195) உங்களை நீங்களே அழித்துக் கொள்ள வேண்டாம். (4:29)

புகை பிடித்தல் மனிதனுக்கு மரணத்தை ஏற்படுத்தும் புற்று நோய் போன்ற கொடிய வியாதிகளுக்குக் காரணமாக உள்ள தென மருத்துவம் தெளிவு படுத்தியுள்ளது. மேலும் அல்லாஹ் கூறுகிறான்: உண்ணுங்கள், பருகுங்கள், வீண் விரயம் செய் யாதீர்கள். நிச்சயமாக வீண் விரயம் செய்பவர்களை அவன் நேசிப்பதில்லை. (7:31)

இத்திரு வசனத்தின் மூலம் அல்லாஹ், அனுமதி வழங்கப் பட்ட காரியங்களிலேயே வீண்விரயம் செய்வதைத்தடுத்துள் ளான் என்பதால் பயனற்ற புகைத்தலுக்கு செலவு செய்வது ஹராம் என்பது மிகத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

மேலும் நபி(ஸல்)அவர்கள் செல்வத்தைப் பாழாக்குவதை தடுத்துள்ளனர். புகை பிடித்தலுக்கு செலவு செய்வது எவ்வித சந்தேகமுமின்றி செல்வத்தைப் பாழாக்கும் காரியமாகும். புகைக்கும் பொருட்களான புகையிலை, பீடி, சிகரெட், சுருட்டு போன்றவற்றை வியாபாரம் செய்வதும் அதற்காக இடங்கள் வாடகைக்கு கொடுப்பதும் ஹராமாகும்.

அல்லாஹ் கூறுகிறான்: (முஃமின்களே!) நீங்கள் பாவத்திலும் வரம்பு மீறும் காரியத்திலும் ஒருவருக்கொருவர் உதவீ செய் யாதீர்கள். (5:2)

புகைக்கும் பொருட்களை விற்பதும் அதற்காக இடங்கள் வாடகைக்கு விடுவதும் பாவமான காரியத்திற்குத் துணை போவதாகும். இதை இவ்வசனத்தின் மூலம் அல்லாஹ் ஹரா மாக்கியுள்ளான். இன்னும் அநேக ஆதாரங்கள் உள்ளன. அறிவுள்ளவனுக்கு இந்த இறைவசனங்களும் நபிமொழிகளும் போதுமானதாகும். புகைப்பதை அறிவுரீதியான ஆதாரங்களும் தடை செய்கின்றன.

புகை பிடிக்கும் பழக்கமுள்ளவன் அதை விட்டு விட்டால் சிந்தனை தடுமாறுவதை உணர்கிறான். இப்பழக்கமுடையவன்

நோன்பு நோற்பதற்குக்கூட இயலாதவனாக ஆகிவிடுகிறான். எனவே அல்லாஹ் மற்றும் அவனது தூதருக்கு வழிப்படுதலுக்கும் பிறருக்கும் இடையூறாக இருக்கக்கூடிய இப்பழக்கத்தை விட்டுவிட வேண்டுகிறோம்.

## حكم اللحية

## தாடியின் சட்டம்

● தாடியை மழிக்கவோ குறைக்கவோ செய்யலாமா?

தாடியைச் சிரைப்பது ஹராமாகும். ஏனெனில் இது நெருப்பு வணங்கிகள் மற்றும் இணைவைப்போருக்கு ஒப்பாவதாகும். 'பிற சமுதாயத்தவர்களுக்கு ஒப்பாக நடக்கின்றவர் அச்சமுதாயத்தைச் சார்ந்தவரே' என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். (அஹ்மத், அபூதாவூத்)

மேலும் இது அல்லாஹ் படைத்துள்ள இயற்கையான தோற்றத்தை மாற்றுவதும், ஷைத்தானின் ஏவல்களில் உள்ளதும் ஆகும். அல்லாஹ் கூறுகிறான்: அல்லாஹ் மனிதர்களை எந்த இயற்கை அமைப்பில் படைத்திருக்கின்றானோ அந்த இயற்கை அமைப்பில் நிலைத்திருங்கள். அல்லாஹ்வினால் படைக்கப் பட்ட அமைப்பில் மாறுதல் செய்ய முடியாது. இல்லை. (30:30) ஷைத்தான் கூறியதை அல்லாஹ் கூறிக்காட்டுகிறான்: நிச்சயமாக நான் அவர்களை அல்லாஹ்வின் படைப்பில் மாற்றம் செய்யும்படி ஏவுவேன். (4:119)

தாடியை பூரணமாக வைப்பது இயற்கையான சுன்னத்துக்களில் உள்ளதாகும். தாடியைச் மழிப்பது நபிமார்கள் ரசூல்மார்கள் மற்றும் அவர்களைப் பின்பற்றிய நல்லடியார்கள் அனைவரின் நடைமுறைக்கும் மாற்றம் செய்வதாகும். நபி(ஸல்)அவர்களின் தாடி அகலமாகவும் அடர்த்தியாகவும் இருந்தது. மேலும்

அல்லாஹ் திருக்குர்ஆனில் ஹாரூன் (அலை) அவர்கள் தமது சகோதரரான மூஸா (அலை) அவர்களிடம்: 'என் தாயின் மகனே! எனது தாடியையோ தலை முடியையோ பிடித்து இழுக்காதீர்.' (20:94) எனக் கூறியதாக அறிவிக்கின்றான்.

தாடியைக் கத்தரித்துக் குறைப்பதும் நபிவழிக்கு மாறு செய்வதாகும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் தாடியை (குறைக்காமல்) முழுமையாக விட்டு விடுங்கள். (புகாரி) யார் அவர்களுக்கு மாறு செய்கிறாரோ அவர் அல்லாஹ்வுக்கே மாறு செய்தவராகிவிடுகிறார். அல்லாஹ் கூறுகிறான்: எவர் அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் மாறு செய்கிறாரோ அவர் பகிரங்கமான வழிகேட்டில் இருக்கிறார். (33:36)

## الاحتفال بالمولد
## பிறந்த நாள் விழா

நபி (ஸல்) அவர்களுக்கோ மற்றவர்களுக்கோ பிறந்த நாள் கொண்டாடக் கூடாது. ஏனெனில் இது மார்க்கத்தில் புதிதாக உருவாக்கப்பட்டதாகும். நபி (ஸல்) அவர்களும் நேர்வழி பெற்ற கலீபாக்களும் இன்னும் இவர்களைப் பின்பற்றிய சிறந்த சமுதாயத்தவர்களான முன்னோர்களும், இமாம்களும் கூட இதைச் செய்யவில்லை. இவர்கள்தான் நபி (ஸல்) அவர்களின் நடைமுறையை நன்கு தெரிந்தவர்கள்.

நபி (ஸல்) கூறினார்கள்: நமது இந்த மார்க்கத்தில் இல்லாத ஒன்றைப் புதிதாக ஒருவர் உருவாக்கினால் அது நிராகரிக்கப்படும். (புகாரி, முஸ்லிம்)

எனக்குப் பின் வாழ்பவர் அதிகமான கருத்து வேறுபாடுகளைக் காண்பார். அப்போது நீங்கள் எனது சுன்னத்தையும் நேர்வழி பெற்ற என்னுடைய கலீபாக்களின் சுன்னத்தையும்

பற்றிப்பிடித்துக் கொள்ளுங்கள். அதைக் கடவாய்ப் பற்களால் கவ்விப் பிடித்துக் கொள்ளுங்கள். மார்க்கத்தில் புதிதாகத் தோற்றுவிப்பதை விட்டும் உங்களை நான் எச்சரிக்கிறேன். நிச்சயமாக புதிதாக உருவாக்கப்பட்ட அனைத்தும் பித்அத்து களே. பித்அத்துகள் அனைத்தும் வழிகேடாகும். வழிகேடுகள் அனைத்தும் நரகில் கொண்டு போய்ச் சேர்க்கும். (நபிமொழி) (அஹ்மது, அபூதாவூது, நஸயீ, திர்மிதி)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: எனது மண்ணறையை விழாக் கொண்டாடும் இடமாக ஆக்கிவிடாதீர்கள். அல்லாஹ் யூதர்களை நாசமாக்குவானாக! அவர்கள் தம் நபிமார்களின் கபுருகளை வணங்குமிடமாக ஆக்கிவிட்டனர். என்மீது ஸல வாத்துக் கூறுங்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: அபூதாவூது, திர்மிதி.

நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களுக்கு அறிவுரை கூறி னார்கள்: அலீயே! எந்த உருவங்களையும் அழிக்காமல் விட்டு விடாதே. தரை மட்டத்திற்கு மேல் உயர்த்தப்பட்ட எந்த கப்ரை யும் தரைமட்டமாக்காமல் விட்டுவிடாதே. (அஹ்மது, முஸ்லிம்)

அல்லாஹ் கூறுகிறான்: (நம்) தூதர் உங்களுக்கு எதைக் கொடுக்கிறாரோ அதை எடுத்துக் கொள்ளுங்கள். எதை விட் டும் உங்களை விலக்குகிறாரோ அதை விட்டும் விலகிக் கொள் ளுங்கள். (59:7)

இறைத்தூதரின் கட்டளைக்கு மாறு செய்பவர்கள் தங்க ளுக்கு ஏதேனும் கடும் சோதனை நேர்ந்து விடுமோ, தம் மீது துன்புறுத்தும் வேதனை வந்து விடுமோ என அஞ்சட்டும். (24:63)

